உரிமை
[illegible]

# ஷம்சுத்தாசீன் கோவை.

இது

பிரபல வர்த்தகரும்
வெட்டுவாங்குளமாதிய் கிராமங்களுக்கிறைர்தாரும்
பாளையங்கோட்டை ஆனரெரி மாஜிஸ்ட்டிரேட்டுமான
மேலப்பாளையம் ஸ்ரீமான்
வ. செ. த.
ஷம்சுத்தாசீன் தரகனாரவர்கள்மீது

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புலவரு ளொருவரான
தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்
மகாமதி, சதாவதானி
கோட்டாறு
கா. ப. செய்குதம்பிப் பாவலரவர்களால்
இயற்றியது

---

மேலப்பாளையம், வித்வான்
வ. அ. மல்க்கான்அலி சாகிபவர்கள்
இயற்றிய
அரும்பதவுரையோடு

சென்னை:
ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1919

## இப்புத்தகத்தி லடங்கியவை

—:*:—



ஸ்ரீமான்,
வ. சே. த. ஷம்சுத்தாசீன் தரகனர்
பிரபல வர்த்தகர், ஜெமீந்தார்,
ஆனரெரி மாஜிஸ்திரேட்.
மேலப்பாளையம்.

வறியவருக் கேறுவே யீகையென வன்றுணர்ச் சான்ற வுத்த
நெறியதனுக் கிலக்கியமா யிற்பரிவர் சித்தரித்த நிறையச் சொன்னம்
குறிப்பறிந்து கொடுப்பதன்றிக் குடியிருக்கக் குடில்பலச்சதங் குயிற்றி னாய
புரியதென்னும் பெயர்புனைந்து வறிஞருக்கெ லாமளித்த புண்ய சீலன்.

சத்தானத் திறுமன்ன தானமதே யேற்றமென விசைப்பர் பல்லோ
ரத்தானத் திறுமிக்க தாகும்வித்தி யாதான மதற்கீ டெய்து
பத்தாயி ரங்கொடுத்துக் குடியேற்றத் தார்க்காகப் பள்ளி யொன்றுஞ்
சத்தாலைத் தொழுமிடற்கோ ராலயமுங் கட்டிவைத்த கனதி யாளன்.

ஆக்கமிலாத் தனமதென்று மதைப்படைத்த மாந்தரெலா மவனி மீது
நோக்கமுறற் காதரவு காலமென்று மங்கமொடு கோயில் லாத
வாக்குயிருர் தாறுமலை யில்லாராய் வாழ்வரென வழங்கு முன்னோர்
வாக்கையெலாம் பொய்யாக்க வாக்கையெடுத் தவதரித்த வாய்மை யா

இன்றுசெய் தார்க்கண விதஞ்செய்த லேமுறையென் றியம்பு மாறே
மின்னார் தாறுமில்ல மிழிக்கயவி லேரிடத்து மேவுங் காலை
யொன்றுரி னுரைக்கினங்கி யுபயபுத்தி ரர்க்கும்விட வுண்டி யீந்த
வன்றுனுக் காயிரக்கி யபயமுட னர்த்தமளித் தாண்ட வண்ணல்.

இத்தகைய வாண்டகைமேற் கோவையொரு நானூற்றி ரேடி ரண்டு
பத்ததன்மே லேர்துகவி யாலியற்றிப் பார்க்களித்தான் பகரு மர்த
வுத்தமனு ரோவென்னி னுரைக்குதங்கோட் டாறுக குறைந்திடுஞ்சே
துத்தம்பிப் பாவலனு முத்தமிழின் சாகரமாங் குரிசின் மாதோ.

தேவாமிர் தப்பிரசங் கக்கனஞ்சி யம்மெனவுந் தெரிந்த மேலோர்
நாவாண்ம காமதியா னெனவுமிரு பட்டங்க ளல்கப் பெற்றுப்
பூவாருஞ் சென்னைமிசை யவதான மொருநூறும் புரிந்த வித்தப்
பாவாண னருள்கோவைப் பயன்விரித்த லெவர்க்கும்வெகு பார மம்மா.

---

நல்லாசிரியன் பத்திராதிபரும்
மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புலவருளொருவரும்
சென்னை வேப்பேரி குயின்மேரிஸ்காலேஜ் தமிழ்ப்பண்டிதருமான
ம-ா-ா-ஸ்ரீ, கா. நமச்சிவாய முதலியார்
அவர்கள் இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாமருவும் புகழ்படைத்த மேலப்பா னயம்புரக்கும் பண்பு வாய்ந்தோன்
நாமருவுங் கவிவாணர் நயமருவப் பொருள்வயக்கும் நலமே சான்றோன்
காமருவு கொடையாளன் ஷம்சுத்தா சின்பெயர்கொள் காவ லோன்மேற்
றேமருவு சுவைமருவு கோவைநூல் வளம்பெறவே செய்திட் டானால்.

எண்ணருமெய்த் துறவியர் செறுமுனிவர் மேயபே
பன்னியகல் லறப்பயனும் பகர்தரும்பல் நூனுணர்வி
னுண்ணியபச் சேமீனுன் சேர்ன்மைபுஞ்செந் தமிழுணர்ந்து
நண்ணியமெய் யோகமுமே கல்லுக்கொண் டெழுந்தவே. (2)

கூறிந்தமிழ் கலைதெளிந்து முட்பொருளின் பயனுணர்ந்திற்
பறிந்துமயல் யைபொருட்குப் பகர்தருக்க நூலோரும்
மதித்திடகல் லுரைவழங்கி மணர்தருசீர் வள்ளுவர்நூல்
விதித்தபடி நடையயின்று விளங்குறுஞ்சற் குணமேலோன். (3)

செச்செல்வளர் திருவாகூர்க் குத்திரிபா மக்நாதி
பன்னருந்தண் கோட்டாற்றுக் குப்பதிற்றுப் பத்துமுதற்
சொன்னவன்றன் றூயபெரும் புகழுடையான் றுணையுடையான்
அன்னவனு ளென்னின்மிக வன்புளனுல் வம்பிலனே. (4)

என்னிதயத் திருளுடைவித் தெழிறருதற் சொற்சாலும்
தன்னருமைத் தனியிருத்தித் தருக்கலைகள் பலவொழிச்சே
புன்னரும்பே ரிசைம்பா லவதான மொருங்கியற்றும்
பன்னருஞ்சீர் செய்குதம்பிப் பாவலவன் பரிவினும். (5)

பண்பரவு புகழ்மேலப் பாளையமாம் பெரும்பதியில்
விண்பரவு கொடையாலே மேவியசீ ரேவிரும்புக்
கண்பரவு மெழில்வடிவத் தாசிறு மிருந்தவன்றன்
றிண்பரவு புயவலியின் சிறப்பொளிறத் தெண்ணியரோ. (6)

எழுத்துமுத லிலக்கணமு மிலக்கியத்தின் பெருஞ்செறிவும்
பழுத்தொழுகப் படிக்குநர்க்கும் பகருநர்க்கும் பழகுநர்க்கும்
விழுத்தகுசீ ரறிவுதர மேன்மையுடை யகப்பொருளால்
வழுத்தினவாக் கினைக்கோவை மதிநலத்து வளமையுற. (7)

சொற்கண்டு பொருள்கண்டு தொடைகண்டு நடைகண்டு
முற்கண்ட நற்சுவையே முதிர்கண்ட வர்நூற்குக்
கற்கண்டு சர்க்கரைமுக் கனியமிழ்தி னினைகாலேனன்
மற்கண்ட நாக்கொண்டு வாயார வாழ்த்துதற்கே. (8)

---

இந்நூலாசிரியரது மாணாக்கரு ளொருவரும் கோட்டாறு
ஹையர்கிரேட் செகிண்டரி ஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமான

பறக்கை, ம-ள-ள-ஸ்ரீ,

எம். குமாரசாமிப்பிள்ளை அவர்கள்

இயற்றியது.

நேரிசை வெண்பா.

வெற்றி தருங்கரத்தான் வெள்ளிடம்சுத் தாசிறுவை
சொற்றவன்றன் பாரும் குலவுதற்கே — கற்றவர்கள்
உட்குமுறு காப்புலைக்கா லூரைக் கினைக்கோவை
செய்குதம்பி பாவலவன் சேர்த்து.

# சாத்துகவிகள்.

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான
கோட்டாறு வித்வான், ம-௱-௱-ஸ்ரீ,
கிருஷ்ணசாமிப்பிள்ளை அவர்கள்
இயற்றியது.

நேரிசையாசிரியப்பா.

திருவளர் தாமரைத் தேம்பொழி லுடுத்த
மருவளர் பாண்டி வளநாட் டின்கண்
தண்டுறை மேவுந் தாம்பிர வன்னியும்
வண்டுறை சோலையு மருங்கு விளங்கும்
ஹாமீம் புரமெனு மரும்பதி வாழுஞ்
சோம லெண்குடை அக்கிய செல்வன்
தக்கோன் ஷம்சுத் தாசீ னெனும்புகழ்
மிக்கோ னகம் விளங்க வைத்திணைக்
கோவை யென்னுங் குலவிய வாரம்
மேவச் சூட்டினன் விரிநீர்க் கோட்டைப்
பதிவாழ் செல்வன் பண்புறு குணத்தோன்
கதிபெற வெற்குத் தமிழ்கற் பித்தோன்
தொல்காப் பியமுதல் தோன்றி லக்கணமும்
பல்காப் பியமும் பயிறரு நாவினன்
சொன்னய முதலாச் சொன்னபன் னயமுந்
தோன்றப் பாடிர் அயாத் கவிஞ
னுன்று மவதான மொருநூறும்
பன்னிய செய்குத் தம்பிப்பா வலனே.

---

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான
காமரகுளம் ம-௱-௱-ஸ்ரீ,
எம். சிவதாணுக்கவிராயரவர்கள்
இயற்றியது.

நேரிசை வெண்பா.

பொன்னணிகொண் மாடமலி ஹா மீம்புரிக்கோர்
மன்னனென வந்துதித்த வள்ளலெனும்—மின்றேனிசே
கோவை பலபுனைந்த கோன்மைஷம்சுத் தாசீன்மேல்
கோவையொன்று செய்தளித்தான் கூர்ந்து.
சீரார்செய் குத்தம்பிச் சீரியன்றன் றேம்பாவை
ஆரார் புகழாதா ரம்புவியிற்—பேராரும்
கண்மணியா யென்றுமுட் கலந்துநின்ற கற்பகமா
யென்றுங் கவிராச ரேறு.

---

ஹாமீம்.

பிஸ்மில்லாஹி.

# ஷம்சுத்தாசீன் கோவை.



———:*:———

## காப்பு.

கட்டளைக்கலித்துறை.

திருவார் மருமகற் செய்குமன் ஆர்தினந் தெய்தவரோ
குருவா யமைந்த புமான்ஷம்சுத் தாசி னுவந்தணியுந்
தருவா ரகப்பொரு ளாந்திணைக் கோவை கழறநிதம்
மருவா ருருவி னகப்பொருட் டுள்ள மமைந்துதுமே.

---

நூல்.

## களவியல்.

அஃதாவது-பொருளதிகாரத்துட் கூறப்பட்ட உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் பிறவுந் தம்முளொத்த பதினைந்தாண்டும் பத்துமாதமுஞ்சென்ற தலைவனும் பதினோராண்டும் பத்துமாதமுஞ்சென்ற தலைவியும் கொடுப்போரும் பிறருமின்றி யூழ்வயத்தாற் றாமேயெதிர்ப்பட்டுப் புணர்தற்றன்மை. இங்ஙனம் புணர்தல் அகப்பொருளிற் கூறிய எண்வகை மணத்துட் காந்தருவமணமாய்க் கைக்கிளைமுதல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலீறாகிய பதினேழு கிளவித்தொகைகளை யுடையது; அவை வருமாறு:—

---

### கைக்கிளை.

அஃதாவது-தலைவன் மாட்டாவது தலைவிமாட்டாவது நிகழு மொருதலைக்காமம்; அவற்றுளிது- தலைவன்பாற்படு மொருதலைக்காமமாய்க் காட்சி ஐயம் துணிவு குறிப்பறிதல் என நான்குவகைப்படும்; அவை வருமாறு:—

காட்சி.

(இ-ள்.) தலைவன் தலைவியை ஒருபூஞ்சோலையிடத்துக் காணுதல்.

மாமேவி தழைத்து வனசமுங் கோங்கு மருவியல்லிப்
பூவே புணர்ந்து புதுமற வேற்றனி பூண்டுபுகழ்க்
கோவே யெனவரு வோன்ஷம்சுத் தாசின் குளிர்சிலம்பின்
காவே சிறப்பா கடுவிலொர் பூங்கொடி காண்கின்றதே. (1)

ஐயம்.

(இ-ள்.) கண்ட தலைவன் இவள் எந்த வுலகத்துப் பெண்ணோ? வென்று சந்தேகப்படுதலைக் கூறுதல்.

வானோ புவியோ மலையோ கடலோ மதியிரவி
தானோ வனசத் தனித்தனி சோவுற்ற தண்டமிழ்க்கோர்
கோனோ வெனவருள் வோன்ஷம்சுத் தாசின் குளிர்சிலம்பின்
கானோ டொளிதரு வாளிரு டந்தவக் காவகமே. (2)

துணிவு.

(இ-ள்.) சந்தேகிக்கப்பட்ட தலைமகள்பாதம் பூமியிற் படிதலாலுங் கண்புடை பெயர்ச்சியாலும் பூலோகத்துப் பெண்ணெனத் தெளிந்து கூறுதல்.

காலே பதிந்தன கண்ணே யிமைத்தன காணுமலர்
மேலே புலர்ந்தன மெய்ங்கிழல் கண்டன மேவுமிவற்
றாலே யரசர்பி ரான்ஷம்சுத் தாசி னருட்சிலம்பின்
பாலே யமரிட மன்றிமற் றில்லையிப் பாவையர்க்கே. (3)

குறிப்பறிதல்.

(இ-ள்.) தெளிந்த தலைமகன் தலைவியின் வேட்கை அவள் பார்வையாற் றன்னிடத்துள்ள தென்றறிதலைக் கூறுதல்.

படையேறு கைக்குலத் தோன்ஷம்சுத் தாசின் பனிவரைசேர்
நடையே யிலருளர் நெஞ்சென் றிரண்டொரு தண்கமலப்
புடையே சமர்களர் நீத்தல்செய் பண்டிதர் போன்றனிவ
ளிடையே யிலையா லினித்தன மோவந்திங் கெய்துறுமே. (4)

கைக்கிளை - முற்றிற்று.

---

## இயற்கைப் புணர்ச்சி.

அஃதாவது-தெய்வத்தாலாவது தலைவியாலாவது கூடுதல்; அவற்றுள்ளிது—தலைவியாற் கூடுதலென்க. அது: வேட்கைபுணர்த்தல், மறுத்தல், உடன்படல், கூட்டமென நான்கு வகைப்படும்; அக்கான்கும் இரந்துபின்னிற்றற் கெண்ணல் முதலிய பதினொரும் பிறவுமாகிய விரிவையுடையன; அவையாவன:—

இரந்துபின் னிற்றற் கெண்ணல்.

(இ-ள்.) தலைவன் தலைவியையாசித்துப் பின்னிற்றற்கு நினைத்தல்.

தேடித் தனக்கரு ளோன்ஷம்சுத் தாசின் செழுஞ்சிலம்பில்
வாடி யலையேல் வருவாய் மனமே மகிழ்ந்திரந்தற்
கோடி புருவோ ருருவா யழுதோ டொளிர்வரைபோற்
கோடித் தனமுள ரொன்றிரண் டிருவர் கூடுதற்கே. (5)

இரந்து பின்னிற்றல்.

(இ-ள்.) அங்ஙனமெண்ணிய தலைவன் தலைவிக்கு இதஞ்சொல்லிப் பின்னே நிற்றல்.

செம்போ டொளிர்புயத் தோன்ஷம்சுத் தாசின் [illegible]வரைசேர்
வம்போடு கூந்தன் மடமயி லேயுன்றன் வார்தனப்பொற்
கொம்போட விட்ட கொழுமுத் தன்னிரு கூர்விழியா
மம்போட வைப்பி னமையுங்கொ லோவென்ற னாருயிரே. (6)

முன்னிலையாக்கல்.

(இ-ள்.) தலைவி தெப்பது தன்காரியத்திற்கு [illegible] மென்றெண்ணி அவனைத் தலைமகன் முன்னிலையாக்கி மொழிதல்.

கோடும் பிறைநுதற் கோமள மேயுளங் கூர்ந்தெவரும்
பாடும் புகழ்ப்பெரு மான்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்
காடும் பொழிலுஞ் சுனையு மடுத்துன்ற னாரியரோ
டாடுந் தொழின்மறந் தாய்தனித் தாயென்கொ லாதரமே. (7)

வண்டோச்சி மருங்கணைதல்.

(இ-ள்.) தலைவன் தலைவியினது கூந்தலிலுள்ள வண்டினை யோட்டுதல்போலத் தலைவியினது பக்கத்திற் சார்தல்.

தாதை யெனப்புரப் போன்ஷம்சுத் தாசின் றமிழ்க்கிரிசேர்
பேதை யிவள்பா லனிகா னிசைவகை பேசியிவள்
கோதை யடைந்தீர் மறந்தி ரொருநால் கொளுமியனீர்
மேதை புரிவீர் செனுவீ ரிசைவலர் மேவகமே. (8)

மெய் தொட்டுப் பயிறல்.

(இ-ள்.) தலைவன் தலைவி சீரத்திலே குறிப்பைத் தீண்டிப் பழகுதல்; அஃதாவது - தோளைத் தொட்டுரையாடல்.

சொற்கண்ட வாணர் தொடை[illegible]டை குடுமுயர்
மற்கண்ட தின்புய மான்ஷம்சுத் [illegible]வெற்பிற்
கற்கண்டு வேண்டுங் கனதன் [illegible]ட்டதாஞ்
சூற்கண்ட மெய்ப்பொரு ளோர்[illegible]த முற்றுறுமே. (9)

### பொய்பாராட்டல்.

(இ-ள்.) தலைமகன் தலைமகள்மாட் டுள்ளது மில்லதுங் கூறிப் புகழ்ந்து கொண்டாடுதல். ஆயின்; உள்ளது கூறுதலும் பொய்பா ராட்டலோவெனின்? அற்றன்று. மற்றென்னையெனின்? இல்லது கூறுவான் உள்ளதை விட்டுவிடுவா னல்லனென்க.

எல்லாரு மேத்துமிக் கோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பில்
வல்லாருங் கொங்கை மடமயி லேயுன்றன் வார்குழற்சீர்
செல்லார வேண்டி யலைவாய்ப் பயயிகச் சென்றலறி
யல்லாரு மேனுமர் கோசலம் விட்டங் கழுங்கிடுமே (10)

### இடம்பெற்றுத் தழால்.

(இ-ள்.) தலைவன் தலைவியைத்தழுவுதற்கு வாய்த்த இடத்தைக் கண்டு கூறுதல்.

முந்தத் தவத்தின் முழுதுல கேத்த முதிர்ந்துதித்த
சந்தத் தடமுலை யீர்நாக்குங் கட்கலை தைத்தவலஞ்
சிந்தத் தயங்குமென் சிந்தா குலமறச் சேர்ந்ததரு
விந்தத் திருப்பது வேள்ஷம்சுத் தாசீன் வியன்பொழிலே. (11)

### வழிபாடு மறுத்தல்.

*(இ-ள்.) இரந்து பின்னிற்றன்முதலாகப் பொய்பாராட்ட லீறுகத் தலைவன் வழிபட்டதனைத் தலைவி மறுத்தல்.

பண்ணேறு மென்மொழிப் பாவலர் போற்றுநற் பைந்தமிழ்ச்சீர்
விண்ணேறு மாறமைத் தோன்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பிற்
றண்ணேறு சாந்தஞ் சமைந்தனி தேறலுஞ் சார்ந்தனவி
லெண்ணேறு போதங்கொண் மாதவி யேயெம்மை யேற்றருளே.

### இடையூறு கிளத்தல்.

(இ-ள்.) தலைவி வெட்கமுற்றுக் கண்ணை மூடிக்கொண்டு நிற்றலினு லெழுந்த துன்பத்தைக் கூறுதல்.

பாட்டாற்றி வந்தநற் பாவலர் வேண்டும் பரிசளித்துங்
கேட்டாற்ற வல்லபு மான்ஷம்சுத் தாசீன் கிளர்வரையீர்
தேட்டாற் றிகழ்ந்த செழுந்தன சீந்துக்கை சேரலர்போற்
கோட்டாற்றை விட்டிய ராமீன் புரங்கொளுங் கொள்கைகன்றே.

### நீடுநினைந்திரங்கல்.

(இ-ள்.) புணர்ச்சி யெய்தாமையா லிவளுள்ள மென்னுள் நிலையுமோ? வென நெடுநேரத் தலைவனினைந்து தலைவியைப் பார்த்துக் கூறுதல்.

பாராளு மன்னர்பி ரான்ஷம்சுத் தாசீன் பனிவரைசேர்
காராளுங் கூந்தற் கனியமு தேயுன் கனகமுட

மாரனுங் கும்பத் திலைபே தலைபாய் மதித்தெழுந்தன்
னீரனு மந்தக் கடிதட நீந்தி நிலைப்பதென்றே. (14)

மறுத்தெதிர் கோடல்.

(இ-ள்.) முன்வழிபாடு மறுத்ததனை மறுத்துத் தலைவி தலைவன் கூறிய சொல்லை யேற்றுக் கோடலைக் கூறுதல். போரேற்றா னென்பதற்குப் போரெதிர்த்தானென்புழிப்போல. எதிர்தல் - ஏற்றல்.

கோடா தருள்குணத் தோன்ஷம்சுத் தாசின் குளிர்வரைவாய்
வாடா மலர்த்தொடை மன்னர்தங் காமவெவ் வாரிபொங்கி
போடா தெழுந்துதி னெஞ்சே நமக்கோர் குறைக்குணையாய்
நாடா தடுத்தெதிர் நிற்குங்கொ லோசந்த நாணணையே. (15)

வறிது நகைதோற்றல்.

(இ-ள்.) தலைவி முகத்திலே சிறுநகை தோன்றுதல்.

பொன்னு மொளிருமிப் பூங்கொடி தன்னுளப் போக்கினைத்து
மென்னு மெனமயங் கேந்தறம் மேக்க விருட்காசர்
மன்னு மொளிருமெம் மான்ஷம்சுத் தாசின் மலையவெற்பின்
மின்னு மொளிர்ந்தது மெல்லிநல் லாண்முத்த வெண்ணகையே. ()

இக்கவி உரைப்போருங் கேட்போரு மின்மையாற் கவிக்கூற்றென்று கொள்க.

முறுவற் குறிப்புணர்தல்.

(இ-ள்.) தலைவி சிறுநகையின் குறிப்பைத் தலைவனுணர்தல்.

பகைதந்த மன்னர் தினந்தந்த மூல பலந்தனக்கோர்
தகைதந்த வண்ணல்பி ரான்ஷம்சுத் தாசின் றமிழ்ச்சிலம்பில்
வகைதந்த வேரளி கொண்டோர் முலைக்கொடி மையலரு
ணைதந்த தாலினி மன்றற் சுகமிவ ணண்ணிடுமே. (17)

முயங்குத லுறுத்தல்.

(இ-ள்.) தலைவி புணர்ச்சிக்குடன்பட்ட அருமையை வற்புறுத்திக் கூறுதல்.

மலையான வந்த கலிவாணர் தம்மைக் கனகுவி
பலையான வைத்தபு மான்ஷம்சுத் தாசி னருஞ்சிகர
மலையானன் கண்டக் கோட்டா றடைந்தன மாமதன்வாய்ச்
சிலையானஞ் செய்தரு தேரூர் தெரிந்தினிச் சேருதுமே. (18)

கலவியின் மகிழ்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைக் கலந்தலான் மகிழ்தல்.

திடங்கண்ட வாணர்பி ரான்ஷம்சுத் தாசின் செழுங்கிரிசேர்
விடங்கண்ட வேல்விழி மாதர சேயுன்றன் மெய்படுமோ

ரிடங்கண்ட சொர்க்கத்தர் இன்பக் கனியமு தீர்தெனையுன்
றடங்கண்ட வாகந்த வெள்ளத்து ளாழ்த்த தகைமைமான்றே. (19)

புகழ்தல்.

(இ-ள்.) தலைவியினது நலத்தைத் தலைவன் வியந்து பாராட்டல்.

குன்று மணிப்புயக் கோன்ஷம்சுத் தாசின் குளிர்வரைவாய்
மின்று ரணிகுழ லேயா விந்தமுன் மெல்லடிச்சி
றொன்றுர வாடி யல்லவாய்ப் பயமகிர் தோங்குகண்ணீர்
பொன்று திறைத்தொரு கானின்றன் ளுந்தங்கண் பூத்ததுவே.

இப்பதினுறு துறைகளுள், இரந்து பின்னிற்றற் சென்னல் முதல் நீயேநினைத்திரங்கலீறுகிய பத்தனுள், வழிபாடு மறுத்தலொழி த்த ஒன்பதும் வேட்கை புணர்த்தற்கும், வழிபாடுமறுத்தலொன்றும் மறுத்தற்கும், மறுத்தெதிர்கோடலும் வறிதுநகை தோற்றலுமாகிய இரண்டும் உடன்படற்கும், ஏனையான்குங் கூட்டத்திற்கு முரியன.

இயற்கைப் புணர்ச்சி முற்றிற்று.

---

வன்புறை.

அஃதாவது-தலைவி ஐயுற்றவழி ஐயந்தீரத்தலைவன் வற்புறுத்திக் கூறல்: அஃது-ஐயந்தீர்த்தல், பிரிவறிவுறுத்தலெனஇருவகைப்படும்; அவை: எற்புறவணிதல் முதல் இடமணித்தென்ற லீறுகிய எழுவிரிகளையுடையன: அவை வருமாறு:—

எற்புற வணிதல்.

(இ-ள்.) புணர்ச்சியிடத்துத் தலைவி புனைந்த முத்தார முதலிய கொங்கையணி குழலணிகள் வேறுபட்டவற்றைத் தலைவன்றன்கையினுல் வேறுபாடுதீரப் புனைதல்.

பொன்னணி சேர்புயத் தோன்ஷம்சுத் தாசின் பொலன்கிரிவாழ்
மின்னணி றுண்ணிடை மெல்லிகல் லாயுன் மெலிந்திரங்கேன்
முன்னணி பின்னணி முற்றும் வகுத்து முதலிடைகான்
மன்னணி யாவுமின் னுயமு மின்புற மாட்டுவனே. (21)

அணிந்துழிநாணிய துணர்ந்து தெளிவித்தல்.

(இ-ள்.) தலைவன் அவ்வாறு புனைந்துழித் தலைவி பாங்கியால் அறியப்பட்ட அணிக்கு இவர் கையாலணியும் அணி வேறுபடுமென்றும், அதைப் பாங்கியறியில் ஐயம்பிறக்குமென்றும், நாணுற்றவெட் கப்பட்டாளாக, அதைத்தலைவனறிந்து தலைவியைத் தெளிவித்தல்.

பாவிய லாய்ந்தருள் வோன்ஷம்சுத் தாசின் பனிவரையி
னேவிய மன்ன னொளிர்முகத் தாயுன்ற னுண்மைசெறி
காவியங் கைவைத் தெழுத்தொடு சொற்பொருள் கண்டழியாப்
பாவிய லோதி முடித்தே னனியும்பின் னுய்ந்தாவே. (22)

பெருநயப் புரைத்தல்.

(இ-ள்.) இனி, தலைவன் வருவானோ? வாரானோ? வென்றுதலைவிமுகம் வேறுபட, அதைத்தலைவன் குறிப்பாலுணர்ந்து தனதுயிருக்த காதலைக் கூறுதல்.

காதுங் கனிக்குட் கரைதரப் பாடனி காளுதியி
னோது மொருகைப் பிடியனம் போனடத் தோங்குமிரு
போது முலைமுத்தர் தந்துரை யாடற் புதவியொன்
றேதும் பரும்புகழ் மால்ஷம்சுத் தாசி னிறும்பகத்தே. (23)

தெய்வத்திறம் பேசல்.

(இ-ள்.) மேற்கூறியதைத் தலைவிதெளியாதவளாகத்தலைவன் அவளூழ்வலியின் திறத்தைக் கூறுதல்.

நிதியா லுயர்ந்த துரைஷம்சுத் தாசி னொடுவரைவாய்த்
துதியா ரயில்விழித் தூமொழி யேயுடற் றேமொழியே
மதியா தியற்றும் வலியுன தாயின் மருவருமோர்
விதியாம் பிணையிற் பிணைப்புறு நம்மையும் வெல்லரிதே. (24)

பிரியேனென்றல்.

(இ-ள்.) தலைவன் பிரிவனென்னுங் கவற்சியால் தலைவி யுடல் விளர்ப்பக்கண்ட தலைவன் உன்னைவிட்டுப் பிரியமாட்டேனென்று கூறுதல்.

சிறந்து வளர்நிதி போன்ஷம்சுத் தாசின் செழுங்கிரிவாய்ப்
பிறந்து வளர்ந்தநற் பெண்கொடி யேயஞ்சிப் பேதுறனிற்
றுறந்துங் கனவி னனவோ டுணவுங்கை சோர்ந்திதய
மறந்தும் பிரியேன் பிரியிற் றரிக்கிலன் மன்னுயிரே. (25)

பிரிந்துவரு கென்றல்.

(இ-ள்.) பிரியேனென்றது கேட்டு மகிழ்ந்த தலைவிக்குத் தலைவன் பின்பிரிந்து வருவேனென்று கூறுதல்.

அற்றே ரணிகுழ லாயிழை யாய்பொழி லாடுதிபோர்ச்
செற்றே பகைதடிந் தோன்ஷம்சுத் தாசின் செழுங்கிரிவாய்ச்
சற்றே பிரிந்து வருவேன் றரியேன் றரிக்கிறுமக்
குற்றே பெயர்க்கொடு வந்திடு மென்னக முன்னகமே. (26)

இடமணித்தேன்றல்.

(இ-ள்.) தலைவனூர் தூரத்திருக்கின்றதோ? சமீபத்திருக்கின்றதோ? வென்று தலைவி வருந்திய அதனைக் குறிப்பாற்கண்ட தலைவன் றனதி ருக்குமிட மிகச்சமீபத்திருக்கின்றதென்று கூறுதல்.

யோகத்திற் சிறி துயர்விற் றகைமி னுற்றபல
போகத்திற் சிறந்தபு மான்ஷம்சுத் தாசின் பொலங்கிரிவாய்
மேகத்தி லோங்கு குழன்மட விர்கள் வேறலாம்
பூகத்தி னும்மூர் கறிக்கொடி யேறிப் புணர்ந்திடுமே (27)

இவற்றுள் முன்னையநான்கும் ஐயந்தீர்த்தற்கும், பின்னையமூன் றும் பிரிவறிவுறுத்தற்கு முரியன.

வன்புறை முற்றிற்று.

---

## தெளிவு.

அஃதாவது - தலைவன் கூறிய சொல்லைத் தலைவி மெய்யெனத் தெளிந்தாற்றுவது; இது - வகையும் விரியுமில்லாமனின்றது.

வான்பிறழ்ந் தாலு மலைபிறழ்ந் தாலு மதியிரவி
தான்பிறழ்ந் தாலும் பிறழாத் தகையர்சொற் றுன்றவறி
யேன்பிறழ் வார்பிற ழார்வரு வார்மன மேன்குறல்பூந்
தேன்பிறழ் மார்பகத் தோன்ஷம்சுத் தாசின் சிலம்பகத்தே. (28)

தெளிவு - முற்றிற்று.

---

## பிரிவுழி மகிழ்ச்சி.

அஃதாவது-பிரிந்துபோகுமிடத்துப் பேதுமின்ற தலைவி தன்மையைக்கண்டு தலைவன் மகிழ்தல்; இது - வகையின்றிச் செல்லுங்கிழத்தி செலவுகண் டுளத்தொடு சொல்லலும் பாகனொடு சொல்லலுமாகிய இரண்டு விரிகளையுடையது; அவை வருமாறு:—

செல்லுங்கிழத்தி செலவுகண் டுளத்தொடு சொல்லல்.

(இ-ள்.) புணர்ச்சிக்குறி யிடத்தினின்றும் பெயர்ந்து செல்லாநின்ற தலைமகளது செலவைக்கண்டு தலைவன் றன்னெஞ்சொடு சொல்லுதல்.

மேகமு மோர்கைவெண் சோமனு மோர்கை விளக்கிரு
நாகமுங் கொண்டொரு நாகமு மன்னமு நாணுறவெச்

சோகமுந் தீர்த்தருள் வோன்ஷம்சுத் தாசின் கடற்கிரிவா
யாகமு மொல்க வசைந்துழ மானந்த மாருயிரே. (29)

பாகனொடு சொல்லல்.

(இ-ள்.) தலைவன் றன்னைத் தேடிவந்த தேர்ச்சாரதியிடத்தில் தலைவி செல்லுநிலைக் காட்டிக் கூறுதல்.

முன்னொடு பின்னு முறைமுறை பார்த்துன் முதிருமச்சர்
தன்னொடு வேர்ப்புந் தளர்வுமென் பேரன்புந் தாங்கிமன்னர்
மன்னொடு மாளிகர்த் தோன்ஷம்சுத் தாசின் மலைவலவ
பொன்னொடு மின்னெனப் போவது பாரொரு பூங்கொடியே. (30)

பிரிவுழி மகிழ்ச்சி - முற்றிற்று.

---

## பிரிவுழிக் கலங்கல்.

அஃதாவது - தலைவி பிரிந்த இடத்துத் தலைவன் வருந்துவது; அது மருளுற்றுரைத்தல் தெருளுற்றுரைத்தலென இரண்டுவகைப்படும்; அவை: ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல் முதல்கண்படை பெறாது கங்குனோத லீறாகிய ஐந்து விரிவினையுடையன; அவை வருமாறு:—

ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

(இ-ள்.) தலைவியைப்பிரிந்த மாதர்கூட்டம் வந்து வழிபடுதலைக் கண்டு இம்மாதர் கூட்டத் துள்ளாளென்னைத் தனித்துக் கூடியது என்ன மாயமோ? வென்று தலைவன் மயங்கிக் கூறுதல்.

மெய்யோ டிரண்டெடுத் தன்பொன் றனித்துயர் மென்குழலின்
மையோ டொளிருங் கணமதி போல்வதி வானிலனோர்
கையோ டமர்தரு வோன்ஷம்சுத் தாசின் கனகவெற்பிற்
பொய்யோ கனவோ பிறிதோ வறியேன் புணர்ந்ததுவே. (31)

வாயில்பெற்றுய்தல்.

(இ-ள்.) தலைவி உயிர்ப்பாங்கி முகத்தை நோக்கிச் செல்லுநிலைப் பார்த்துத் தலைவன் அப்பாங்கியைத் ஆதரவைப் பெற்று உய்வதாகக் கூறுதல். பாங்கி - பக்கத்திலிருக்கு முயிர்த்துணைவி.

வருத்தி மயக்கு மயனே யகற்ற மருந்துளதோர்
திருத்தி மனமே பினையே லிவட னிணைவிழிவண்
டருத்தி பயிர்தளிப் போன்ஷம்சுத் தாசி னருட்கிரிவா
பொருத்தி முகதா மரைமல ரோடி யொளித்ததுவே. (32)

பண்பு பாராட்டல்.

(இ-ள்.) தலைவியின் அழகைத் தலைவன் வியந்து கொண்டாடுதல். பண்பு - நன்மை அழகென்மே னின்றது.

அடிபடும் வட்டு மலர்படும் போது மமரிலெதிர்த் ,
தொடிபடுங் கொம்பு முடைபடும் வெற்பு மொளிர்பிறைக்குட்
பிடிபடும் புன்னும்பெம் மான்ஷம்சுத் தாசீன் பெருங்கிரிவாய்த்
துடிபடு நுண்ணிடை கொங்கைக் கிணைசொலத் தோற்றுறுமே ()

### பயந்தோர்ப் பழிச்சல்.

(இ-ள்.) தலைவியைப் பெற்றோரைத் தலைவன் வாழ்த்தல்.

வந்திரந் தார்க்கருண் மான்ஷம்சுத் தாசீன் மலையமின்னை
யெந்திர வாவியை யின்பக் கனியை யெமக்களித்தோர்
சந்திர சூரிய ருள்ளள வும்புகழ்ச் சம்பன ரா
யிந்திர னுஞ்சரி யுங்கடுத் தோங்கி யிலங்குகவே (34)

### கண்படைபெறாது கங்குனோதல்.

(இ-ள்.) அன்றிரவிலே தலைவி தந்த ஆசையால் நித்திரை பெறாது இருட்காலத்தைத் தலைவன் நொந்து கூறுதல்.

படியோர் குடையிற்கொள் வோன்ஷம்சுத் தாசீன் பனிவரையின்
முடியோ விசிகட லோவிழி யிந்தோ முகமெனயாங்
துடியோ டுரைத்த தொடரா லெமையவை சூழ்ந்தெழுந்து
விடியோ மெனநீண் டுறுக்கிக் கருக்கி வெகுண்டிடுமே. (35)

இவற்றுள் முன்னைய தொன்றும் மருளுற்றுரைத்தற்கும், பின்னைய நான்குந் தெருளுற்றுரைத்தற்கு முரியன. காட்சிமுதல் கண்படை பெறாது கங்குனோதலிறுதியாகக் கூறிய முப்பத்தைந்து துறைகளும் முதனாள் நிகழ்ச்சி யென்க.

பிரிவுழிக்கலங்கன்-முற்றிற்று.

---

## இடந்தலைப்பாடு.

அஃதாவது - இயற்கைப் புணர்ச்சியிற் கலந்த தலைவன் மறுநா ளவ்விடத்தில் வந்து தலைவியைக் கூடுதல்; அது: தெய்வந்தெளிதல் கூடல் விழைதலென மூவகைப்படும்; அம்மூன்றுந் தந்த தெய்வந் தருமெனச் சேறல் முதல் ஆயத்துய்த்தலீறாகிய ஐந்து விரிவினையுடையன; அவை வருமாறு:—

### தந்ததெய்வந் தருமெனச்சேறல்.

(இ-ள்.) முன் கூட்டியவிதி பின்னுமவ்விடத்திற் சென்றாற் கூட்டுமெனத் தலைவன் சேறல்.

இன்றந்த விசைபு மின்மையும் யார்க்கு மியல்பெனிற்செம்
பொன்றந்த மார்பன்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்

நன்றந்த வண்பொழிற் றேகைபி னெம்முயிர்த் தோகையின்னே
முன்றந்த தெய்வ மிதுந்தரு மாலங்கு முந்ததுமே. (36)

முந்துறக் காண்டல்.

(இ-ள்.) முன்போலத் தலைவியைத் தலைவன் காணுதல்.

மாறு வமுத மழையோ சுகிர்த மருவுருவோ
நாறு மணிவிளக் கோமதி யோவிதி நன்னழகோ
தேறார் குடிகெடுத் தோன்ஷம்சுத் தாசின் சிலம்பகத்தோர்
கூறு மொளிரு முயிர்க்குயி ராமென் குலதெய்வமே. (37)

முயங்கல்.*

(இ-ள்.) தலைவியைத் தலைவன் புணர்தல்.

மன்னர்க் கதிபதி மால்ஷம்சுத் தாசின் மலையமுத
மன்ன வருவா ளகங்கனிந் தாடு மருள்வெளியு
ளென்னி லவளு மவளகம் யானு மிரண்டறவொன்
றென்னக் கலந்த விருஞ்சுகம் யார்க்கு மியம்பரிதே. (38)

புகழ்தல்.

(இ-ள்.) தலைவன் றலைவியைப் புகழ்ந்து கூறுதல்.

குடைபட்ட கோனுடைக் கோன்ஷம்சுத் தாசின் குளிர்சிலம்பின்
றொடைபட்ட கோதை யிவள்விழி நோக்கித் தொடர்ந்திலைவாய்க்
கடைபட்டுத் தீப்பட் டடிபட்டுச் செம்புனற் கக்கிக்கக்கி
முடைபட்ட தன்றிச் சரிப்பட் டிலையிது மொய்கனையே. (39)

ஆயத்துய்த்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை மகளிர் கூட்டத்துள் விடுத்தல்.

முலைகாட்டி முத்த நகையிதழ் காட்டி முழுதுமின்ப
நிலைகாட்டிக் காட்டுமென் னெஞ்சமன் னீர்கமழ் நெய்ந்நிலவே
விலைகாட்டி யோங்குகை யோன்ஷம்சுத் தாசி னிருஞ்சிகர
மலைகாட்டி யாடுநம் மாயத்துட் போந்தங்கு மன்னுகவே. (40)

இவற்றுள் - தந்ததெய்வந் தருமெனச்சேறலொன்றுந் தெய்வந் தெளிதற்கும், காண்டல் முயங்கல் புகழ்தலாகிய மூன்றுங்கூடற்கும் ஆயத்துய்த்தலொன்றும் விடுத்தற்கு முரியன. இருவகையும் இரண்டாகன் கேழ்ச்சி.

இடந்தலைப்பாடு முற்றிற்று.

---

## பாங்கற் கூட்டம்.

அஃதாவது - முன்னாள் தோழனுற் கூடுங் கூட்டம்; அது: சார்தல் கேட்டல்|சாற்றல் எதிர்மறை நேர்தல் கூடல் பாங்கிற்கூட்டலென வெழுவகைப்படும்; அவ்வேழுந் தலைவன் பாங்கனைச் சார்தல் முதல் பாங்கிற் கூட்டலீருகிய இருபத்துநான்கு விரிகளையுடையன; அவை வருமாறு:—

### தலைவன் பாங்கனைச்சார்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியால் வந்த ஆசைநோய் தோழனு லன்றித் தீராதென்றெண்ணி அவனைச் சார்தல்.

வாவியிற் காவிசுற் பாலெரீடு நீரென மாதலசஞ்
சீவிய லோங்குபு மான்ஷம்சுத் தாசின் சிமையமத
னேவிய வெஞ்சிலைக் கஞ்சிநெஞ் சேயினி யேல்வருவா
யாவியி னுவியன் னுள னின்றென் னருந்துணைக்கே. (41)

### பாங்கன் தலைவனையுற்றது வினவல்.

(இ-ள்.) பாங்கன் தலைவனது மனமும் புயமும் வாடிய வேறு பாடு கண்டு இவ்வேறுபாடு வந்ததற்குக் காரண மென்னை? யென்று கேட்டல்.

நீடாழி வைய நிலைபிறழ்ந் தாலு நிலாப்பகலற் [ல்
றோடா தொழியினு மொண்டமிழ் தேர்ந்துணர்ந் தோர்க்கொருத்த
கோடாது கோடிதந் தோன்ஷம்சுத் தாசின் குளிர்சிலம்ப
வாடா மலர்ப்புயம் வாடிய வாறென் வழுத்துகவே. (42)

### தலைவனுற்றதுரைத்தல்.

(இ-ள்.) அங்ஙனங் கேட்ட பாங்கனுக்குத் தலைவன் தனக் குற்ற வேறுபாட்டின் காரணத்தைக் கூறுதல்.

நீதஞ் செறிகுணத் தோன்ஷம்சுத் தாசி னெடுங்கிரிவா
யேதந் தவிருற வோசெழிற் காமனுற் றெய்தருமென்
போதஞ் சரியப் பொறியணி சாடப் பொருதுதந்த
வாதங் கடுப்ப மலிபுலன் ஞார்த்ததொர் மாதங்கமே. (43)

### கற்றறி பாங்கன் கழறல்.

(இ-ள்.) வேதாகமங்கள் யாவுங் கற்றறிந்த பாங்கன் தலைவனை யிடித்துக்கூறல்.

என்னே கலைகண் முழுதுற வாய்ந்தின் றெழிலனைகை
மன்னே யெனவரு மால்ஷம்சுத் தாசின் மலையவெற்பின்
பொன்னே புரையுமெய் பூணலங் கண்ட புரவலவும்
மின்னே நிகர்த்தபெண் பேதைக் கழிதல் வியப்பலவே. (44)

கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.

(இ-ள்.) பாங்கன் கூறிய உறுதிமொழியைத் தலைவன் மறுத்தல்.

ஆட்சியுங் கோளுங்கொள் வோன்ஷம்சத் தாசி னருண்மலையின்
மாட்சியுங் கொங்கை மலையும் வதன மலருமைம்பா
னீட்சியும் பால நிலவும் புருவ வில்லுமையுங்கண்
காட்சியுங் காண்கிலை காண்கிற் கவல்லைகொல் கட்டுரையே. (46)

பாங்கன் கிழவோற் பழித்தல்.

(இ-ள்.) அங்ஙனங் கூறிய தலைவனைப் பாங்கன் சீறிக் கூறுதல்.

காரைத் தருவையன் றென்ஷம்சத் தாசின் கனகவெற்பொன்
ஞரை நிகர்ப்பவொ ராயிழை யாட்கங்கி லாதலிடைச்
சீரை நினைத்துடைத் தாயர் செயிது தெரிற்சிறு
கோரை வளர்த்துயர் கோபுர மாய்த்தெனுங் கொள்கைத்தன்றே.

கிழவோன் வேட்கை தாங்கற் கருமைசாற்றல்.

(இ-ள்.) தலைவன் பாங்கனை நோக்கி நீ பழிக்கின்ற என்னுள் ளத்தேறுதற்கு வேட்கை யென்றுந் தாங்கமுடியாதெனக் கூறுதல்.

துங்கத் திருகுணத் தோன்ஷம்சத் தாசின் சுடர்க்கிரிவாய்த்
தங்கங் கடுத்தொளிர் தையனல் லாடனைக் காங்கிடைவெஞ்
சிங்கம் பிளந்த செழுமுரத் தன்பனின் றியெனுஞ்சொற்
புங்கம் புகுதிற் பொறுப்பன்கொ லோவுயிர் பொன்றுறுமே. (47)

பாங்கன் றன்மனத்தழுங்கல்.

(இ-ள்.) அதுகேட்ட பாங்கன் எம்பெருமான் ஆற்றுமில் வாறு கூறினுல் அதற்கு நானென் சொல்வேனென்று தன்னுள்ளே வருந்துதல்.

முத்துண் டொளிர்புயத் தோன்ஷம்சத் தாசின் முதிர்கிரிவாய்
பெத்துண் டிலகுமொ ரேந்திழை யெய்த வினைவிழிவேற்
குத்துண் டிருமுலைக் கோடுண் டனுதினங் கூர்த்தமையற்
பித்துண் டழிந்தன னம்மா சென்செயும் பேருலகே (48)

பாங்கன் றலைவனோடழுங்கல்.

(இ-ள்.) இங்ஙனம் வருந்திய பாங்கன் சகியாதவனாய்த் தலைவனோடு வருந்துதல்.

கலகந் தருமொரு கட்கடை மாதிடு காமவலை
யிலகுஞ் சுழுனைக் கென்சொலென் றேவினி யெங்குமொளிர்
திலக மெனவமர் வோன்ஷம்சத் தாசின் சிமையவெற்ப
வுலகம் புரளி லொருவருண் டோவுத வொத்திடற்கே. (49)

எவ்விடத்தெவ்வியற்றென்றல்.

(இ-ள்.) பாங்க னிவ்வாறு கூறியும் தலைவன் வருந்துதலைக் கண்டு இவன் தலைவியைக் கூடாதொழியின் இறந்துபடுமென்று தேறித் தலைவனை நோக்கி நின்னாற் காணப்பட்ட உரு எந்தவிடத்து எந்தவியலை புடையதென்று வினவுதல்.

வானகஞ் சூழ்ந்த மகிதலத் துன்மன வன்மையெல்லாந்
தானகற் றற்கெழு மம்மான் றனக்கிடந் தண்ணருட்கோ
ரானகம் போன்றமர் வோன்ஷம்சுத் தாசி னருஞ்சிகரக்
கானக மோகட லோவிய லேது கழறெனக்கே. (50)

அவணஃதிவ்விடத்திவ்வியற்றென்றல்.

(இ-ள்.) தலைவன் என்னால் காணப்பட்டவுரு இந்தவிடத்து இந்த இயலை புடையதென்று கூறுதல்.

புயலே குழலம் புயமே முகமுடற் பொன்னிடைநூல்
கயலே விழிமுக் கனியே மொழிமுலை கைக்கனிறென்
மயலே தருவாட் கியலிட மார்வல மாழைமழை
பெயலே பெறுகரத் தோன்ஷம்சுத் தாசின் பெருவனமே. (51)

பாங்கனிறைவனைத் தேற்றல்.

(இ-ள்.) இவ்வாறு நீ வருந்தா தொழிக; நீ சொன்ன குறியிடத்துச் சென்று தலைவியைக் கண்டு யான் வருகிறேனென்று தலைவனைப் பாங்கன் தேற்றல்.

திருவே யமர்புயத் தோன்ஷம்சுத் தாசின் செழுங்கிரிசேர்
மருவேய் பெருவனத் துன்மன மாள்வித்து மன்னுயிரைப்
பொருவேல் விழியைப் புலன்கொளு மாசையைப் போக்கதிர்த்து
வருவேன் வருமள வும்பொறுப் பாயென்றன் மன்னவனே. (52)

குறிவழிச்சேறல்.

(இ-ள்.) தலைவன் கூறிய குறியிடத்துத் தலைவியைக்காணப் பாங்கன் தேடிப்போதல்.

முலைப்பகை கண்டு மொழிப்பகை தேடி முழுதுமக்கக்
கொலைப்பகை கொய்ய வெழுவள்கொல் லோகறை கூர்வனத்தும்
பலைப்பகை கொள்ளுரத் தோன்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்க்
கலைப்பகை தோட்டினைக் காவலன் கண்டவக் காரிகையே. (53)

இறைவியைக்காண்டல்.

(இ-ள்.) அவ்வனத்தேடிச்சென்றபாங்கன்தலைவியைக்காணுதல்.

வானே முடிவடி வானே விழிமலர் வாய்வரைதோள்
தேனே மொழிமதிச் சீரே முகமுடற் றேசமெங்கு

னாளே யெனப்புரப் போன்ஷம்சுத் தாசி னணிர்வரையின்
றனே யொருவனைத் தெம்பிறை சொற்றவத் தாழ்குழலே. (54)

இகழ்ந்ததற்கிரங்கல்.

(இ-ள்.) தலைவிபேரழகைக் கண்ட பாங்கன் காணுமுன்னம் எம்பெருமானை யறிவின்றியிகழ்ந்தன மென்றிரங்கிக் கூறுதல்.

தாவுண்டு செல்பரி வேன்ஷம்சுத் தாசின் றமிழ்வரைவாய்
மேவுண்டு வாழுமில் வெண்ணகைத் தேமொழி மின்னுதலைக்
கேவுண்டு நெஞ்ச மினைவுண்டு வந்தவென் னேந்தலையா
ளேவுண்டு வாட றவன்றவெ லாமென்ற னெப்பறிவே. (55)

தலைவனை வியத்தல்.

(இ-ள்.) தலைவி கண்வலையிற்சிக்கி அத்தடைபோலேத் தலைவன் தம்மிடத்து வந்தது வியப்பென்று பாங்கன் அதிசயித்துக்கூறுதல்.

பொறையார் பெருந்தனப் பொற்றொடிச் சிற்றிடைப் பூவையின்ற
னிறையா ரலர்க்குழ லின்முகி லோடிகழ்ந்துபன்னாற்
குறையா துணர்ந்தவென் கோன்ஷம்சுத் தாசின் கொழுஞ்சிரிவாய்
மறையா திருந்ததெவ் வாறெம்பி ரான்கலை மாமதியே. (56)

இதுவுமது.

கலைதாண்டி யோங்குமிக் கோன்ஷம்சுத் தாசின் கனவரையின்
விலைதாண்டிக் கூந்த னிசிதாண்டித் தேம னிலவுமுலை
மலைதாண்டித் துண்ட மதிதாண்டி யெம்மன் மதிசயன
வலைதாண்டிக் காம வலைதாண்டி வந்ததங் கற்புதமே. (57)

தலைவியை வியத்தல்.

(இ-ள்.) தலைவியைப் பாங்கன் வியந்து கூறுதல்.

பருக்கும் பெருமுலைப் பாரத்தி னந்தரப் பற்றொழிந்தில்
இருக்கு மொருமின் னிவள்விழி நோக்கினை யென்றமுற்றோர்
திருக்குங் கருத்துமொத் தோன்ஷம்சுத் தாசின் சிலம்பரசைக்
கருக்கு மயல்விடக் காய்வுக் கமுதெனக் காத்திடுமே. (58)

இவ்வைந்தும் பாங்கன்றன்னுட் கூறியவை.

தலைவன்றனக்குத் தலைவி நிலைகூறல்.

(இ-ள்.) தலைவி குறியிடத்துத் தனித்து நிற்கின்ற நிலையைப் பாங்கன் கண்டுவந்து தலைவனுக்குக் கூறுதல்.

காவுங்கண் டேன்குழற் காடுங்கண் டேனின்னைக் காத்துறகட்
கோவுங்கண் டேனுடற் கோலங்கண் டேனலங் கூர்பெருகும்
பாவுங்கண் டேமகிழ் வோன்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்
பாவுங்கண் டேன்கண்டி லேனிறை வாரின் னியமின்மையே. (59)

தலைவன்சேறல்.

(இ-ள்.) தலைவன் பாங்கன் சொற்படி குறியிடத்திற் போதல்.

மனமாய் விரைந்தவண் மன்னுதற் கேற்ற வழியெதுவு
மினமா யதிர்ந்தில மேயக மேசெய்வ தேதெளிவோர்
தனமா பொளிரும்பு மான்ஷம்சுத் தாசின் றடஞ்சிலம்பி
னனமா யமர்ந்துநிற் பார்தமைக் கூடி யளாவுதற்கே. (60)

தலைவியைக் காண்டல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைப் பார்த்தல்.

வற்றாச் சுகிர்தமெய் வாழ்வளித் தென்னுள மன்னிநின்ற
முற்று முகிழ்முலை மொய்குழ லாள்கலை முற்றுமுற்றக்
கற்றார்க் கமுதனை யான்ஷம்சுத் தாசின் கனகவெற்புட்
பொற்றா மரையனம் போற்றனி நின்றனள் பூம்புனத்தே. (61)

கலவியின் மகிழ்தல்

(இ-ள்.) புணர்ச்சியின் மகிழ்தல்.

மெய்யுஞ் செவியும் விழிநாசி வாயும் விரைந்தருந்திப்
பெய்யு மமுதப் பிழம்பனை யிரும்பிற் பெற்றசுகம்
பொய்யும் புலையுமற் றோன்ஷம்சுத் தாசின் பொதியவெற்பி
லெய்யுங் ககனோ டிகதலத் தாருமிங் கெய்தரிதே. *(62)

புகழ்தல்.

(இ-ள்.) தலைவன்புணர்ந்தபின் றலைவியைப் புகழ்ந்துகூறுதல்.

அலைவாய்ப் படிந்தனை யாகமுங் கூனி யறக்குறைமி
மலைவா யெழுந்தனை மாசே செறிந்தனை மாமறைநாற்
கலைவாய் வருமியல் போன்ஷம்சுத் தாசின் கனகமலை
நிலவா யிணைமுலை நேர்நுத லொத்திலை நீணிலவே. (63)

பாங்கியொடு வருகெனப் பகர்தல்.

(இ-ள்.) இனி நீ யுன்னுயிர்ப்பாங்கியுடனே வருவாயென்று தலைவிக்குத்தலைவன் கூறுதல்.

கண்ணுக் கிமையுங் கடத்துக் குயிருங் கலந்ததொத்தெம்
மெண்ணுக் கருளனை யினிநீ யிவ ணேகினென்றும்
பண்ணுக் கிசைபுக ழோன்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்
மண்ணுக் கணிசெய்நும் மன்னையர் தம்மொடு மன்னுகவே. (64)

பாங்கிற் கூட்டல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை ஆயத்துச் சேர்த்தல். ஆயம்-மாதர் கூட்டம்.

சுனைநயப்புரைத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவி புனை நிகழ்ச்சியை வெளிப்படுத்தச் சுனையினது நன்மையைக் கூறல்.

அணியுந் திருத்தி யழகும் பொருத்தி யழிதருநற்
றுணியு மிருத்தித் துனிநீ ருருத்தித் தொடர்ந்தரசர்
பணியும் பதத்தனெம் மான்ஷெய்கத் தாசின் பதியினலர்க்
கணியும் புனைந்தெங் கண்மணி யீரெங் கவின்சுனையே. (68)

சுனைவியந்துரைத்தல்.

(இ-ள்.) பாங்கி அச்சுனை வியப்பை யானுமாடிக் காண்பேனென்று கூறல்.

காவி சிவந்து கமலம் பசந்து கருகுமல்லி
மேனி வெளுத்து விடுமே யடியேன் விளங்குமொன்று
ராவி யகற்றுமெம் மான்ஷெய்கத் தாசி னணிவரைவாய்த்
தாவி பொலிந்துமின் னேகுடை வேனந்தத் தண்சுனையே. (69)

நகையாணங்குறுத்தல்.

(இ-ள்.) தலைவியினது வேற்றழகு கண்டு அவளைத் தெய்வப் பெண்ணாகப் பாங்கி வலியுறுத்திக் கூறுதல்.

காவே புகுந்து கழங்காடி யாடிக் கதித்தசுனைப்
பூவே கொணருமென் பொன்னுருப் போன்றயிப் பூதலத்தோர்
கோவே யெனவரு வேள்ஷெய்கத் தாசின் குலக்கிரியின்
றேவே வெளுத்திதழ் மெய்பசந் தக்கண் சிவந்தனையே. (70)

நடுங்க நாட்டம்.

(இ-ள்.) தலைவி நடுங்கத்தக்கதாகப் பாங்கி யாராய்தல்.

பொய்யா மொழித்திறத் தோன்ஷெய்கத் தாசின் பொதியைமலர்ச்
செய்யா ளனவொளிர் சேயிழை யீரவன் செம்பொன்மழை
பெய்யா திருந்து மிறங்கிச் சிவந்த பெருங்கரம்போன்
மையார் களிற்றொரு கோடுகண் டேமனை மாழ்கினனே. (71)

இத்துணையு மூன்றாநாள் நிகழ்ச்சி யென்க.

---

## குறையுறவுணர்தல.

அஃதாவது - தலைவன் தழை முதலியவற்றைக்கொண்டு தன் பாற் குறையுற்று நிற்பக்கண்டு பாங்கி அதனானே கூட்டமுண்டென் றறிதல்; அது: தேர்தல் தெளிதலென இருவகைப்படும். தேர்தல்-ஆராய்ச்சி செய்தல். அவை வருமாறு:—

பெட்டவாயில்பெற்றிரவு வலியுறுத்தல்.

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்ப் பிரிவுழிக் கலங்கலின் வாயில் பெற்றுய்தலென ஆண்டு விரும்பப்பட்ட பாங்கியைத் தலைவன் ஆதரவுபெற்றுக் குறையிரந்தலை வற்புறுத்திக் கூறுதல்.

பொருளா லறமும் பொலிவாற் புகழும் பொருந்துறல்போற்
றெருளா துயர்ந்தமி ழன்ஷம்சுத் தாசின் செழுஞ்சிலம்பி
லிருளார் மதிமுகத் தேந்திழை தன்னுயி ரென்னுயிவ
ளருளாற் பெறலா மகமே யவட னருந்தனமே. (72)

மனை வினாதல்.

(இ-ள்.) தலைவன் கன்னியர் தழைபுமேக்கிக் குறையுற்றவன் போலவந்து நின்று ஊர்யாதென்று பாங்கியைக் கேட்டல்.

மதியே யிகழ்ந்த மலர்முகத் தீர்வண்மை வாய்ந்தவிரு
நிதியே யெனவருள் யோன்ஷம்சுத் தாசி னெடுவரைக்கோர்
புதியேன் றனியிவண் போந்தன னும்மிற் பொலிவுறுமப்
பதியே துரையீர் பகரிற் சிதையுங்கொல் பான்முத்தமே. (73)

பெயர் வினாதல்.

(இ-ள்.) வெளி.

காரே யனைய தருங்குழ லீர்நற் கனகமணிச்
சீரே பெறுகழ லோன்ஷம்சுத் தாசின் செழுஞ்சிலம்பி
லூரே யுரைக்கில வீருமக் கின்புவந் தாற்றதிருப்
பேரே னுமோதுதி ரேழையென் மீது பிரியமுற்றே. (74)

கெடுதிவினாதல்.

(இ-ள்.) கெட்ட பொருளைத் தலைவன் பாங்கியிடத்தில் வினாவுதல்.

துப்புண்டு சேக்குந் துவரித ழீரென் சுடர்க்கணைமுன்
றப்புண் டடிக்கடி தாவுண் டொருமான் றணிமுற்று
மொப்புண் டொளிர்புயத் தோன்ஷம்சுத் தாசி னுயர்வரைவாய்
வெப்புண் டொழிந்துறக் கண்டதுண் டோவின்று வீரமக்கே. ()

வழிவினாதல்.

(இ-ள்.) தலைவன் றான்செல்லும் வழியைப் பாங்கியிடங் கேட்டல்.

கல்லுங் கருதுங் கனதனத் தீரொளி கண்டுகதி
ரெல்லும் பணிமுடி யோன்ஷம்சுத் தாசி னிருஞ்சிலம்பிற்
செல்லும் வழிதெரி யேன்றினைத் தேனுளந் தேர்ந்தகலச்
சொல்லு மொருவழி சொன்ன லிணையிலைச் சூழ்பிறையே. (76)

கண்டே யிகர்த்த கனிமொழி யீர்சொலிற் கற்பகமுங்
கொண்டே வருவ னிருதிதி யென்றே குறுநகலர்காற்
றண்டே பணிபதத் தோன்ஷம்சுத் தாசின் றடத்திடைநாக்
தொண்டே பணிப்பதத் துணைபுரிந் தாளுமென் றோத்திரமே ()

பாங்கிகுலமுறை கிளத்தல்.

(இ-ள்.) தலைவன் இவ்வாறு கூறியதற்குப் பாங்கி குலமுறைமையா லிசையாதென மறுத்துக் கூறுதல்.

புனமே புவனம் பொருவறக் காத்திவன் போக்குறுத்தங்
கனமே சிறுமை கருதிலை நாளுங் கருதலர்க்கு
வனமே தருங்கொடை மான்ஷம்சுத் தாசின் மலையவெற்பி
னினமே யறிதி யிழிக்கோர்க் குயர்ந்தோ ரிணையிலரே. (86)

தலைவன் றலைவி தன்னை யுயர்த்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை யுயர்த்திக் கூறுதல்.

சிப்பியின் முத்தமுஞ் சேற்றின் மரையுஞ் செனித்திடினு
மொப்பியிங் கேற்கில நன்றிகொ லோவுல குங்ககனுஞ்
செப்பிய மாதவத் தோன்ஷம்சுத் தாசின் சிலம்பணியி
ரப்பிய நன்னல மல்லா லிலைகுல மாயிழைக்கே. (87)

பாங்கி யறியாள்போன்று வினாதல்.

(இ-ள்.) தலைவன் தலைவியிடத்துக் காதல்கொண்ட தறியாள் போல நீ எவளிடத்துக் காதல்கொண்டாயெனப் பாங்கி வினாதல்.

கனையும் பொழில்கமழ் கூசல்பந் தோடலர் சூழ்தெழிலம்
மனையும் பயிலுநர் பற்பல ராண்மத மாரிசிந்தி
முனையுங் கடகளிற் றோன்ஷம்சுத் தாசின் முழுமலைக்கென்
றனையு மறைந்தனைத் தான்மறை யாரெவர் கார்மன்னனே. (88)

இறையோனிறைவிதன்மை யியம்பல்.

(இ-ள்.) தலைவன் தான் காதலித்த தலைவி தன்மை கூறுதல். தன்மை - இலக்கணம்.

மருளும் பிணைவிழி மாகுஞ் சாமுலை வாய்குமுத
மிருளும் புயல்குழ லேகின் மதிமுக மென்றுமின்று
மருளுந் திருக்காத் தான்ஷம்சுத் தாசி னருட்சிலம்பிற்
றெருளும் பொலிவுங்கொள் சேயிழை யேயென்றன் றேமொழிக்கே.

பாங்கி தலைவி யருமை சாற்றல்.

(இ-ள்.) தலைவி கிடைத்தற்கரியளென்று பாங்கி கூறுதல்.

அறிவே யுருவா யவதரித் தெங்க ணருந்தவத்தின்
செறிவே யெனவருந் தெய்வத மின்முன் சினந்தெதிர்த்தோர்

முறிவே தரப்பொரு தோன்ஷும்சந் தாசின் முதிர்கிரியிர்
பிறிவே தருமுனை யாதொன்றும் யாமங்குப் பேசரிதே. (90)

தலைவனின்றியமையாமை யியம்பல்.

(இ-ள்.) தலைவியில்லாது வாழ்வெனக்கில்லையெனத் தலைவன் கூறுதல்.

சொன்னமி லாது சுகம்வரு மோவென்றுஞ் சுற்றத்தசர்
சின்னமி லாதழிப் போன்ஷும்சந் தாசின் செழுங்கிரியாய்ப்
பின்னமி லாதொளிர் பேசரு ளிர்யாகப் பிடிபடுமோ
நன்னமி லாதின் றமையுங்கொ லோவென்ற னுநுதிரே. (91)

பாங்கி நின்றுறை நீயேசென் றுரையென்றல்.

(இ-ள்.) தலைவியினிடத்து எனக்கு வேண்டுவனவற்றை நீயே சொல்லென்று பாங்கி கூறுதல்.

வாயே யெவர்க்கும் வருங்குறை சொற்றிட வாய்த்துளதிந்
நாயே னெதற்கு நவிலவொ ணாதுற்ற நற்றமிழ்க்கோர்
தாயே யெனவருள் வோன்ஷும்சந் தாசின் றவிச்சிலம்பி
னீயே யிகழ்த்துக நின்குறை யாவுமந் நேரிழைக்கே. (92)

பாங்கியைத் தலைவன் பழித்தல்.

(இ-ள்.) தலைவன் பாங்கியை நிந்தித்துக் கூறுதல்.

செயலா யுயர்ந்தபு மான்ஷும்சந் தாசின் சிமையபின்னிர்
கயலா யமர்ந்த கடுவிழி பாய்ந்து கலங்குமென் றன்
மயலாங் கனற்கு மழையாய் நினைத்தநின் வார்த்தைமுற்றும்
புயலாய் முடிந்தது பூவையன் னீசொன்ன புத்தியிதே. (93)

குறையுறவுணர்தன்முதலி துகாறு நான்காநாள் நிகழ்ச்சியென்றுணர்க.

பாங்கி பேதைமை யூட்டல்.

(இ-ள்.) தலைவி பிறர் துயரமறியாளென அவளது பேதைமையைப் பாங்கி தலைவனுளங் கொளச் சாற்றல்.

பாரார் பழிச்சும்பு மான்ஷும்சந் தாசின் பதிக்கரசே
கவீரர் கரிகலை மான்முத லாம்பல கான்விலங்கை
போரா துறவதைத் துணுறும் வேட ருவந்தளித்த
கூரா ரயில்விழி யின்னே வறியுங் குணமிலளே. (94)

காதலன்றலைவி யறிவுடைமை மொழிதல்.

(இ-ள்.) அவ்வாறு கூறிய பாங்கியை நோக்கி முதிர்ந்த அறிவினையுடையாள் தலைவியாதலின் அவளை யங்ஙனங் கூறற் பாலையல்லையென்று தலைவன் கூறுதல்.

வாயா துலகம் வழுத்துந்தம் மெண்ணை மறிவிழிகொண்
டோர்யா துரைத்தெனக் குன்னையுந் தந்துடைத் தோடுகைத்

தாயாய்ப் புரந்தருள் வோன்ஷம்சுத் தாசீன் சயிலமன்னு
பேபா மருவினையு மேயவட் கோவில்லை யீங்குணையே (95)

பாங்கிமுன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்.

(இ-ள்.) இவ்வாறு கூறக்கேட்ட பாங்கி முன் னின்வேட்கைதீர்த்தானென்றுகூறினையே யங்ஙனமேயின்னங்கூடுகவென்றுகூறுதல்.

முன்னு லறிந்தவின் முற்றிழை தன்னை முயங்குதற்குப்
பின்னு மொருநாளை யேன்வின்கொ லோபுவிப் பொன்னணைக்கின்
மன்னு புதிதரு மாஷம்சுத் தாசீன் மலயவெற்ப
தன்னால் வருந்துயர் தானறி வாளங்குச் சாருதியே. (96)

தன்னிலை தலைவன்சாற்றல்.

(இ-ள்.) அதுகேட்ட தலைவன் வேட்கை நோயால் வருந்துந் தன்னிலைமையைப் பாங்கிக்குக் கூறுதல்.

கடலிற் படிந்தெழு காவகம் புக்குங் கனிந்தசென்ற
னுடலிற் புகப்புனைந் தாலுந்தன் சீர்த்தி புலகனைத்து
நடலிற் பெரியபு மான்ஷம்சுத் தாசீனன் றுடனையீர்
விடலி லவண்மயல் வெந்திக் குனையன்றி வேறிலையே. (97)

பாங்கியுலகியலுரைத்தல்.

(இ-ள்.) உலகில் வேட்கை கொண்டார் சான்றோரை முன்னிட்டு வரைந்து கொள்வர். அவ்வா றுலகியலாதலால் நீயும்வரைந்து கொள்கவெனப் பாங்கி கூறுதல்.

மறையார் மொழிப்படி மானிலத் தெங்கு மகிழ்வுறநன்
னிறையார் கனிதரு நீண்மணங் காண்பது நேர்மையல்லாற்
பொறையார் அருணப்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்
குறையார் மொழிபல கூறிலெவ் ஞேவுயர் கொற்றவனே. (98)

தலைமகன் மறுத்தல்.

(இ-ள்.) அவ்வுலகியலைத்தலைவன் வேட்கையாற்றாதுமறுத்தல்.

வருத்தி மயங்கு மயலேறு யளித்தவம் மாதரசை
விருத்தி புறவரைந் தேற்றிடென் றுபிது வெற்றரைக்குச்
செருத்தி யிளம்பிறைச் செய்ஷம்சுத் தாசீன் சிமையமன்னுப்
பருத்தி விதைத்துப் படக்கொள நாடுமப் பான்மையன்றே. (99)

பாங்கியஞ்சியச்சுறுத்தல்.

(இ-ள்.) பாங்கி இச்செய்கை பிறரறிவரென்று பயந்தவளாய்த் தலைவனை அப்புனம்விட்டுப்போக அச்சுறுத்திக்கூறுதல்.

மாலையும் வந்ததெம் மன்னர்பொல் லார்வந்து வாய்ந்தவறச்
சாலைய நாடுமுன் னோன்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பிற்

இரந்து குறையுறாது வருந்திய கிழவோன்
மடலே பொருளென மதித்தல்.

(இ-ள்.) மறுநாட் காலையில் வந்த தலைவன் பாங்கியாற் காரியமின்றெனக்கருதி இரந்து குறைமுடியா தாயினுமென்று வருந்த முற்று இனி நமக்குப் பொருளாவது * மடலேறலேயெனத் தன்னுள்ளே மதித்துக்கூறுதல்.

மாறாக் கொடிய மயலுற்று நொந்து மயங்கிநெஞ்சே
நீறாக் கரிந்த நெடுந்துயர்க் கேதிலர் நீடுமடற்
கூறாக் கயிற்காக் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்வரைவாய்ப்
பேறாஞ் சிவிறிப் பொன்னையல் லாலில்லைப் போக்கற்கே. (105)

பாங்கிக் குலகின்மேல் வைத்துரைத்தல்.

(இ-ள்.) தலைவன் அம்மடலேற்றினை உலகின்மேல்வைத்துப் பாங்கிக்குக் கூறுதல்.

வீறு மொருத்திசெய் காமவெந் தீயுண் மிடைமிடைக்கோர்
தாறு மிருந்து துயரடைந் தோரென் றுஞ்சொன்னமணிப்
பூணு மிலைப்புயத் தோன்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பி
னூறு முயர்பனை யூர்ந்துமு மாறக்க வொண்டொடியே. (106)

* மடலேறலாவது - பனங்கருக்காற் குதிரையும் பனந்தருவினுள்ளவற்றால் வண்டி முதலானவுஞ்செய்து அக்குதிரையின்மேலேறுவது. அங்ஙனமேறுவான் றிகம்பரனாய்த் தான் காமித்த தலைவியினுருவை யொருபடத்திற் றன்கையாலெழுதி அப்படத்தின்றலையிலே தன்பெயரை யெழுதித் தன்கையிற் பிடித்து நடுவூருள்ளே நாற்சந்தியி லாகாரநித்திரையின்றி அப்படத்தின்மேற் பார்வையையு மனத்தையுமிருத்தி ஆசையயத்தனாய் வேறுணர்ச்சியின்றி ஆவுரிஞ்சினும் அழல்மேற்படினுமறிதலின்றி மழைவெயில் காற்றான் மயங்காதிருப்புழி, அவற்றைக்கண்ட அவ்வூரிலுள்ளார் பலருங்கூடி வந்து நீ மடலேறிச் சோதனை தந்தால் நீ யிச்சித்த பெண்ணைக் கொடுக்கச்செய்வோமென்று கூற, அதற்கவ னிசைந்தானாயி னரசனுக் கறிவித்து அவனேவலால் ஏறவேண்டும்; அங்ஙனமேறும்போது பூளையெருக்கம்பூ இலைகளாற்கட்டிய மாலை புனைந்துகொள்ளல் வேண்டும். அக்குதிரையின் வடத்தை யிழுத்தலும், அக்குதிரை யக் கீரத்திலுருளை யுருண்டோடும்போது பனங்கருக்கு அறுத்த விடமெல்லாம் இரத்தம் வெளிப்படாது வீரியம் வெளிப்படின் அப்போதவனை யலங்கரித்து அவனுக்கு அரசன் கொடுக்கச்செய்தல் வேண்டும். இரத்தம் வெளிப்படி னவனை யரசனுற் கொலைசெய்துவிடல் வேண்டும் என்பன புலவரா னிருபிக்கப்பட்ட வழக்கு.

இவற்றுள் - தலைமகன் கூற்றுவின வெல்லா மடற்கூற்றிற்கும் பாங்கி கூற்றுவின வெல்லா மடல்விலக்கிற்கு முரியன.

தலைவியினமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவியினது மங்கைப்பருவ நிரம்பாமையைத் தலைவனுக்குக் கூறுதல்.

முலையோ பருத்தில மொழியோ நிறைந்தில முற்றுமங்கண்
கொலையோ பழகில கூந்தற் றிரைந்தில கூடலர்வெண்
டலையோ டமரிற் கொன்ஷம்சுத் தாசின் றடத்துறைபைங்
கலையோ வுடுக்கறி யாளிவண் மீட்டுடன் கொலுவதே (112)

தலைவன்றலைவி வருந்தியவாறு முரைத்தல்.

(இ-ள்.) அங்ஙனங் கூறிய இளமைப்பருவமே தன்னை வருத்திய விதத்தைத் தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

புள்ளிற் பொலியும் புனற்றலை யிர்மதன் பூவதம்போ
டெள்ளின் றலையரும் போதற் றிறைத்தழ லென்னுயிர்க்கே
விள்ளிற் பொதுமத வேள்ஷம்சுத் தாசின் பிணிர்வரைவாய்
முள்ளின் முனையென மொய்த்துள தாற்கொலை மொய்விழிக்கே.

பாங்கி செவ்வியருமை செப்பல்.

(இ-ள்.) பாங்கி தலைவியின் சமையத்தினருமை தலைவனுக்குக் கூறுதல்.

கணையுங் கடமுஞ் சகமும் பணியுந் துணியுநல்லம்
மணையும் பொழிலு மறந்தனை ளெயுற்ற மாற்றலர்மென்
முனையும் பெருந்தளத் தோன்ஷம்சுத் தாசின் முதிர்சிலம்ப
கிளையும் படியவட் கின்கென்கொ லோயா னிகழ்த்துவதே. (114)

தலைவன் செவ்வியெளிமை செப்பல்.

((இ-ள்.) தலைவன் றன்குறை சொல்லுதற்குத் தலைவி சமையம் எளிதெனக் கூறுதல்.

ஒருநாள் மறந்துறைந் தாலுமென் பேருவந் தோடிவந்துன்
னருகாய்த் தழுவி யறைகில ளோது மணிமகுடன்
தருகாற் றழும்புடைக் கோன்ஷம்சுத் தாசின் றடவரைவா
யிருகா லியம்பிலென் னுயிரை யாமுனின் கேய்க்குமே, (115)

பாங்கி யென்னை மறைத்தபின் னெளிதென நகுதல்.

(இ-ள்.) தலைவி யிருவருமெனக்குத் தெரியாமன் மனமொத்துக் கலந்தபின் இக்களவொழுக்க மொழுகுதற் கெளிதெளிதென நகை யாடிப் பாங்கி கூறுதல்; எனவே யென்னையன்றி நுங்கள் களவொழுக்க நிகழாதென்பது குறிப்பாற் பெறப்பட்டது.

இறைவனி னைத்துக் குறைநேர் பாங்கி
இறைவிக்கவன்குறையுணர்த்தல்.

(இ-ள்.) தலைவன் வருத்தந்தணிப்பவென்றுசொல்லிய பாங்கி அவ்வருத்தத்தைத் தலைவிக்குக் கூறுதல்.

தழையாரா கமுந் தளர்வா றுடலுந் தனிமையுமாய்ப்
பழையாரி லோர்புறி யார்வரு வார்வந்து பற்றலர்போன்
மழையார் இருக்கர மால்ஷம்சுத் தாசின் மலையவெற்பி
னுழையா ரலா ருனையார் கருத்தென்கொ லோதுதற்கே. (121)

இறைவி யறியாள்போன்று குறியாற் கூறல்.

(இ-ள்.) பாங்கி யிவ்வார்த்தை கூறவே தலைவிகேட்டுத் தா னொன்று மறியாள்போல மனத்திற் கருதாத வேறொன்றைக்கருதிக் கூறுதல்.

திணைமே னருங்கார் செய்ஷம்சுத் தாசின் செழுமலைச்சீர்க்
கணமே புகலாக் கருதல ரோடிக் கருத்தழிந்து
வணமே யிடனு வளரிலை காய்கனி மற்றுமடுத்
தினமே யலைவதென் னேங்கிழை யீரிவ் விரும்பொழிற்கே. (122)

பாங்கி யிறையோடு கண்டமை பகர்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவ னின்வயத்தனாக வந்ததனைக் கண் டேனென்று கூறுதல்.

பாருங் கலனும் பகர்ஷம்சுத் தாசின் பனிவரைவா
யாரும் புகழு மணிமுலை யீரும் மருங்கலம்வேட்
டேரும் பெயரு முறையும் வழியு முவந்தவரைக்
காரும் படருநங் காவகத் தின்றெதிர் கண்டனனே. (123)

பாங்கியைத் தலைவி மறைத்தல்.

(இ-ள்.) தலைவி தன்களவொழுக்கத்தைப் பாங்கிக்கு மறைத்துக் கூறுதல்.

விணாய் விளம்பல்பெண் பாவம்பொல் லாது வெறுத்தனையான்
காணு தெழுந்து காந்தனன் றோகடற் காசினிக்கோர்
மாணு ரதிபதி மால்ஷம்சுத் தாசின் மலையவெற்பிற்
பூணு ரிணைமுலை யாயுண்ப ரோகஞ்சம் புத்திவைத்தே. (124)

பாங்கி யென்னை மறைப்பதென்னெனத் தழாஅல்.

(இ-ள்.) இவ்வாறு மறைத்துக் கூறிய தலைவியைப் பாங்கி யுனக்கு நான் வேறோ? வென்று உவகையாகத் தழுவிக்கூறுதல்.

ஊடறி யாவுனை யொன்றுள மொன்றுவப் பொன்றன் றின்றோர்
பாடறி யாவுயிர்ப் பாவையன் னீர்மறைப் பன்னவென்றுங்

கேடதி பரச்செழுங் கோற்ஷண்முகந் தாசின் கொர்கிரிகள்
ளுடதி யாச்சடர் காவதி யாச்சையை காணுகின்றே. (125)

பாங்கி கையுறை புகழ்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவன்கொடுத்த காட்சிப்பொருளைப் புகழ்ந்து கூறுதல்.

சிலையுங் குலையுஞ் செழுந்தனத் திர்செகி சிற்றிடைக்காங்
கலையுங் குழையுங் கனியுந் திலைமுதல் கருதலருண்
மலையும் படிபொரு மால்ஷண்முகத் தாசின் மலயவெற்பி
னிலையுந் துணைந் மணியு மிவையுவந் தேற்றருளே. (126)

இவற்றுள்-பாங்கி கூற்றுயினவெல்லாங் குறையயப்பித்தற்கும், தலைவி கூற்றுயினவெல்லா மறுத்தற்கு முரியன.

தோழி கிழவோன்றுயர்நிலை கிளத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவனது வேட்கைகொண்ட துயர்நிலையைத் தலைவிக்குக் கூறுதல்.

குளிறுங் கனையுங் குறையு மருந்திக் குலவியன்று
மொழிறுங் கழற்றுலை போன்ஷண்முகத் தாசி லொளிர்தடக்கோர்
களிறும் பிடியுங் களிதுயில் கொண்டுறல் கண்டணங்கே
வெளிறு முகத்தி னுயிர்த்தெனை நோக்கி வெளிக்கனரே. (127)

மறுத்தற் கருமை மாட்டல்.

(இ-ள்.) இவ்வாறு பாங்கி கூறிய சொற்கட்கு விடையின்மையால் இனி அத்தலைவன்வசி லென்றுன் மறுத்தற்கரிதெனப் பொருத்திக் கூறுதல். மாட்டல் - பொருத்தல்.

எவுஞ் சலித்த விழியி னிறைசறைக் கொம்மறியு
யாவுஞ் சலித்தபு மான்ஷண்முகத் தாசி னிருஞ்சிலம்பிற்
காவுஞ் சலித்தசெங் கையுஞ் சலித்தபொய்க் கட்டுரைக்கோர்
நாவுஞ் சலித்தவிந் நாமுஞ் சலித்துன்க ணன்னினமே. (128)

தலைவன் குறிப்புவேறாக நெறிபடக் கூறல்.

(இ-ள்.) தலைவனென்னுங் குறிப்பு நம்பாலிரப்பவன்போற் றோற்றவில்லை. வேறு நினைப்பானாகத் தோன்றியதென் றெழுங்குபடப் பாங்கி கூறுதல்.

வினையாற் பயனும் வினைவாற் பொருளும் விளங்கலொத்தோர்
பனையாற் கனிவரும் பாரென்ப ரன்பர் பகைபனைத்து
முனையாற் றெறுமயில் வேன்ஷண்முகத் தாசின் முதிர்கிரிசேர்
நனையார் கறுங்குழ லிர்பொரு ளேதவர் காட்டுரைக்கே. (129)

பாங்கி தலைவியை முனிதல்.

(இ-ள்.) தலைவி யொன்றற்கு மறுமொழிகொடாளாக அவளைச்சினந்து பாங்கி கூறுதல்.

அறியா தறைந்தே னறிந்தே னருமையிற் காமலரைக்
குறியா தடக்குங் குழலோர்க் குரைகுறை கூறுமன்னா
னெறியா புணர்ந்தபின் கோன்ஷம்சுத் தாசி னெடுவரைசேர்
பொறியா ரிளமுலை யாய்கும்பிட் டேன்சொற் பொறுப்பதற்கே. ()

தலைவி பாங்கியை முனிதல்.

(இ-ள்.) அங்ஙனங் கூறிய பாங்கி சொற்களைப் பொறுதவளாய்த் தலைவி பாங்கியைக் கோபித்துக் கூறுதல்.

வெறுக்கும் பழிமொழி விண்டனை தாவி மெலிவுறமெய்க்
குறுக்குங் குணத்தனங் கேகுல நீர்மை குறித்தினித்தெவ்
வறுக்கும் பெருமராத் தான்ஷம்சுத் தாசி னருட்கிரிவாய்
மறுக்கு முரைநக வோதொள வோசொலென் வாயகத்தே. (131)

தலைவி கையுறை யேற்றல்.

(இ-ள்.) அங்ஙனங்கூறியபின் இனி, பாங்கியையன்றி யொன்று முடியாதென்று கருதி அவன் கொடுத்த கையுறைப் பொருளைத் தலைவி வாங்கிக்கொள்ளுதல்.

கொண்டாற் பழியொடு கொள்ளில மேனின் குறைமொழியு
முண்டா மெனக்கலக் குற்றலை வேமை யுவந்தொளிர்பூந்
தண்டா மரைப்பதத் தான்ஷம்சுத் தாசின் சயிலமன்னாய்
விண்டா தரவி னளித்ததனை யாவதில் வேண்டுதுமே. (132)

இவற்றுள்-பாங்கி கூற்றாயினவெல்லாங் குறையுயப்பித்தற்கும், தலைவி கூற்றாயினவெல்லாங் குறைநேர்தற்கு முரியன.

இறைவி கையுறை யேற்றமை பாங்கி யிறைவற் குணர்த்தல்.

(இ-ள்.) தலைவி தழைமுதலியவற்றை யேற்றுக்கொண்டமையைத் தலைவனுக்குப் பாங்கி கூறுதல்.

வாங்காய் தழையெனு முன்னவள் தோடு வளர்முலைகண்
பாங்கார் முகமிதழ் வாய்சிரம் யாவும் பதித்தவனி
தாங்கா பிரங்கதி ரோன்ஷம்சுத் தாசின் றமிழ்ச்சிலம்ப
நீங்காது நீயெனப் பல்கான் முகந்து நினைந்தனளே. (133)

பாங்கி தலைமகற்குக்குறியிடங் கூறல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைச் சந்திப்பதற்கு ஒரு அறிகுறியுள்ள இடத்தைப் பாங்கி கூறுதல். அறிகுறி-அடையாளம்.

செல்லுங் கருதாஞ் செழுங்காத் திநட் டிடிக்குறச்செல்
வெல்லும் பெருந்தன வேள்ஷம்சுத் தாசின் கிரிவரைவெண்
கல்லும் வயிரமுங் கௌத்துவ முத்துங் கலந்தவிலா
நல்லும் பகலா யனிரிடம் பாம்பக லாகிடமே. (134)

பாங்கி குறியிடத் திறைவியைக் கொண்டுசேறல்.

(இ-ள்.) முன்சொன்ன அடையாளமுள்ள இடத்துக்குத் தலை விவியைப் பாங்கி கூட்டிக்கொண்டு செல்லுதல்.

பொன்னு ரமுதப் பிறம்பிய வருதி பொருமுலைச்சி
றென்னு தெழுமலைக் கின்றெதிர் கேட்டிடி யிடலை
மன்னு னதிபதி மாக்ஷம்சுத் தாசின் மலையெவற்பிற்
கன்னு லலைவரு கன்னலிர்க் குவலயங் காண்பதற்கே. (135)

பாங்கி தலைமகளைக் குறியிடத் துய்த்து நீங்கல்.

(இ-ள்.) கூட்டிச்சென்ற தலைவியைக் குறியிடத்து நிறுத்திவி ட்டுப் பாங்கி நீங்குதல்.

கண்பகை காற்பகை கைப்பகை போற்பகை கண்டுபமோ
ரண்பகை தீர்த்தடை யாமயி லாய்ந்திய வாகிவள்ளு
மண்பகை தீர்த்தவெம் மான்ஷம்சுத் தாசின் மணிவரைவாய்த்
தண்பகை தீர்த்தொளி ரின்சொலல் லாய்பாற்றுத் தங்குகவே. (136)

இறைவி யிறையோனிடத் தெதிர்ப்படுதல்.

(இ-ள்.) தலைவியைத் தலைவனேரே வந்து காணுதல்.

வாளாக் கிடந்து மயற்பசி கொண்டு மயங்குமென்னை
யாளாக்க வென்றோ வருள்வா யமுத மருந்தனமுங்
கோளாச் சுமந்தென் குலதெய்வம் போன்முன் குறுகினைசெந்
தாளா லரசளிப் போன்ஷம்சுத் தாசின் றடத்தணங்கே. (137

புணர்ச்சியின் மகிழ்தல்.

(இ-ள்.) வெளி.

வழுத்துஞ் சுகிர்த மருவுரு வாயெனை வாழ்வித்தின்ப
மழுத்துஞ் செழுந்தனத் தாருபி ரேயின் றாசர்முடி
விழுத்து மலர்ப்பத வேள்ஷம்சுத் தாசின் வியன்சிலம்பின்
முழுத்துஞ் சுகாகந்த வாரிகண் டேயுண் முழுகினனே. (138

புகழ்தல்.

(இ-ள்.) வெளி.

பூணு மகுடப்பு மான்ஷம்சுத் தாசின் பொதியமன்றுங்
காணுந் துடிபு மடிபட் டலறியெ 

கோணுறு பிறையுங் குழையு மரிவனங் கொண்டலையுஞ்
சேணுறு மதனுந் திகைதரு சோற்றன் சிற்றிடைக்கே. (139)

தலைமகனைத் தலைமகள் விடுத்தல்.

(இ-ள்.) தலைவியைத்தலைவன் ஆயக்கூட்டத்திற்செல்லவிடுதல்.

கனைமா மமுதக் கடல்கடைந் தின்பக் கனிவருள்வோய்
சினைமா மயிற்கரச் செய்ஷம்சுத் தாசின் சிலம்பகத்தெம்
மனைமாந் தலையின் வனங்கடந் துன்குழா மன்னியிங்கு
னினைமா யனுப்புதி யேகுதி நல்வினை யீக்கெமக்கே. (140)

பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டல்.

(இ-ள்.) குறியிடத்து நிறுத்திப்போயின பாங்கி தலைவன்போயினபின் தான் கையுறை கொண்டுவரப்போயின பாவனையாகக் கையுறை கொண்டுவந்து காட்டல்.

முலைகண்டு வாயிதழ் மூடரும் பொன்னி முழுதுமுட
னிலைகண்டு வாடும சோகமு நீத்து நிருபர்திறை
மலைகண் டுவக்குமெம் மான்ஷம்சுத் தாசின் மலையகம்பல்
லிலைகண்டு பூக்கண் டெடுத்துவந் தேன்கொள்ளெ னேந்திழையே.

தலைவியைப் பாங்கிற் கூட்டல்.

(இ-ள்.) பாங்கி தலைவியை மகளிர் கூட்டத்திற் சேர்த்தல்.

நந்தா வனத்து நறுமலர்க் காவுள்ளு நண்ணுமல
ரெந்தா யெடுத்தணிந் தேன்குழற் றென்று திரும்புவிக்கோர்
சிந்தா மணியனை யான்ஷம்சுத் தாசின் சிலம்பிடையு
வந்தாயத் தார்வினை யாடிடங் கண்டங்கு மன்னுதுமே. (142)

நீங்கித் தலைவற் கோம்படை சாற்றல்.

(இ-ள்.) தலைமகளை ஆயத்துட்சேர்த்து மீண்டுவந்து பாங்கி தலைவற்கு ஓம்படை சொல்லுதல். ஓம்படை-மறவாமை.

கண்ணுஞ் சுகிர்தமெய்ஞ் ஞானேசர் தாண்மலர் நாடியுள்ளத்
தெண்ணும் பெரும்பதத் தோன்ஷம்சுத் தாசி னெழிற்சிலம்ப
கண்ணுங் கருத்துமென் றும்பிரு வோரைக் கலந்தவெற்குப்
பண்ணும் வரமற வாமைய தேயென்சொல பாக்கியமே. (143)

உலகியன் மேம்பட விருந்து விலக்கல்.

(இ-ள்.) உற்றூர் அயலூரிலிருந்து வந்தாலவர்க்கு உணவுகொடுத்துபசரிப்ப துலகியல் பாதலா லவ்வுலகியல் பெருமைப்படத் தலைவனை யெம்மூர்க்கு வந்திருந்து விருந்துண்டு போவெனப்பாங்கி தலைவன் செல்லுதலை விலக்குதல்.

வில்லிற் றுணையிலெம் வேள்ஷம்சத் தாசின் வியனசலப்
புல்லிற் றொழுமறிப் பாலுங் கறியும் புனத்தனமு
மல்லிற் பழனு மடுத்தே யிறிதெம் மனைவதிக்தோங்
கல்லிற் பகலோ டகலிற் பிழையென்கொ லாண்டகையே. (144)

விருந்திறை விரும்பல்.

(இ-ள்.) அவ்வுணவைத் தலைவன் விரும்பிக் கூறுதல்.

சித்தமும் புத்தியுங் கோடைமெய்ஞ் ஞானியர் சிறக்கண்
ணித்தமும் வைத்தபு மான்ஷம்சத் தாசின் னெடுவரைசி
லத்தமு மன்புமொன் றய்வர் சொன்னாருவி டமும்
புத்தமு தாயின் புசிக்கில நுண்டுகொல் பூந்திருவே. (145)

இவற்றுள் - பாங்கி கூற்றுவினவெல்லாம் கூட்டற்கும் பாங்கிற் கூட்டற்கும் தலைவன் கூற்றுவினவெல்லாங் கூட்டற்கும், வேட்டற்கு முரியன.

இத்துணையும் ஆறாச் சேர்ச்சி யென்க.

பாங்கிற்கூட்டம்-முற்றிற்று.

---

## ஒருசார் பகற்குறி.

அஃதாவது-ஒருகூற்றுப் பகற்குறி; அது-யாதெனில்? தலைவன் மறுநாள் தன்வேட்கை மிகுதியால் பகற்குறியிடத்துவந்து நிற்கத் தலைவியைப் பாங்கி குறியிடத்துச்செலுத்தாது மறுத்துக்கூறத்தலைவன் வருந்திப்போதல். ஆதலாற் பகற்குறியாகாது ஒருசார் பகற்குறியாயிற்று; அஃது-இரக்கல் வன்புறை இற்செறிப் புணர்த்தலென மூவகைப்படும்; அவை வருமாறு:—

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம் போது கண்டிரங்கல்.

(இ-ள்.) மேற்கூறியவாறு தலைவன் பிரிந்துபோகத்தலைவி மாலைக்காலத்தைக் கண்டெருந்துதல்; இக்கூற்றுப் பாங்கியைநோக்கி கூறுதலும் மாலையை நோக்கிக் கூறுதலுந் தன்னுட் கூறுதலுமென மூன்றும்; அவற்றுளிது தன்னுட் கூறுதல்.

துறந்தார்ப் பிறைத்தார்ச் சுடுசினம் போலுமென் றேதைகல்லாய்
பிறந்தா ரிருள்செறி மாலையம் போழ்து பெரிதுறுத்தி
மறந்தார்ச் சிறைசெபு மான்ஷம்சத் தாசின் மணிவரைவாய்க்
கறந்தா ருயிருணு மென்செய்வ லெல்லைக் கடல்கவிழ்த்தே. (146)

பாங்கி புலம்பல்.

(இ-ள்.) தலைவி வருத்தங்கண்டு பாங்கி வருந்துதல்.

மீறும் பெருந்தவ வேள்ஷம்சத் தாசின் வியன்கிரிவாய்க்
கூறுங் குணநலத் தோர்செல மாமதன் கூர்த்துவந்தங்

கேறும் பரியு மிரதமுங் காளமு மீர்ங்குடையுஞ்
சீறும் படிகரிக் கிங்கென்கொ லோவிவள் செய்ததுவே. (147)

தலைவனிடத் தலைவி வருந்தல்.

(இ-ள்.) தலைவன் வாராது நாழிகை நீடிக்கத் தலைவி வருந்திக் கூறுதல்.

பொங்கு மயலுறு பூட்டியென் னின்பப் புதுக்கலங்கொண்
டெங்கும் புகழ்நல் லோன்ஷம்சுத் தாசி னிருஞ்சிலம்பிற்
றங்கு மெனைமறந் தன்னையர் சாருமுன் சார்ந்தவிந்த
மங்கு லிரவினை யெங்கொரு முத்தம் வழங்கிலரே. (148)

தலைவியைப் பாங்கி கழறல்.

(இ-ள்.) பாங்கி தலைவியை நீ வருந்துவது முறைமையன்றெனக் கட்டுரைத்தல்-கழறல்-கட்டுரை, இடித்துக் கூறல், உறுதிச்சொல்.

நஞ்சு மமுது நனவு மறப்பு நலனலதொத்
தஞ்சுந் செழுந்தனந் தஞ்சமன் னீருள் ளழுங்கலென்று
மிஞ்சும் பெரும்புகழ் வேன்ஷம்சுத் தாசின் வியன்சிலம்பி
லொஞ்சும் பிரிவும் புணர்ப்பு முளவுவந் தோதுதற்கே. (149)

தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்.

(இ-ள்.) பாங்கி யெதிரே நிற்கவுந் தலைவி அவள்மேல் வெறுப்பாலவளை நோக்கிக் கூறாது புறமாய்க் கூறுதல்.

வெறியார் மயலும் வினையுஞ் சிறையு மிலைந்துகனற்
பொறியா யுழலுமென் புன்கணுந் தோன்றிப் போந்தமற்றோ
ரறியார் மலைநி யறியாள் பிரசவ வல்லலென்று
நெறியா யுயர்தவத் தோன்ஷம்சுத் தாசி னெடுவரைக்கே. (150)

தலைவி பாங்கியொடு பகர்தல்.

(இ-ள்.) வெறுப்பால் முன்னிலைப் புறமொழிகேட்ட பாங்கி தலைவியை யுபசரித்தலா லவ்வெறுப்பு நீங்கிப் பாங்கியொடு தலைவி கூறுதல்.

சற்றும் பிரியேன் றரியே னெனத்தடுத் தார்மருட
மெற்றுந் திருப்பதத் தோன்ஷம்சுத் தாசி னிருஞ்சிலம்பர்
சொற்றுங் கலந்துந் தழுவியு முத்தியுஞ் சூழ்ந்தவெல்லா
முற்றும் பழுதாய் முடிந்தகொ லோவென்றன் மொய்குழலே ()

தலைவியைப் பாங்கி யச்சுறுத்தல்.

(இ-ள்.) அங்ஙனங் கூறியுந் துன்பமுறுந் தலைவியை அதுநீங்குமாறு பாங்கி பயமுறுத்திக் கூறுதல்.

புனமே மறந்துறு புள்ளு மறந்தொரு போரரசின்
கனமே நினைந்துழல் கன்னிநல் லாயன்னை காணினருட்

பலர்வாய்ப் புகழ்தரித் தோன்ஷண் முகத்தாசன் பனிவரைவீர்
மலர்வாய் வினவிற் றெம்மறை யோர்புனம் வாரியிடு
முலர்வாய்க் குரவி னுறைவரி தில்லெனை யோர்க்கெதமையு
மலர்வா யகத்திற் களைத்தன சேருது மல்லெறிக்கே. (157)

பாங்கி முன்னின் றுணர்த்தி யோம்படை சாற்றல்.

(இ-ள்.) அங்ஙன முன்னின்று கூறிய பாங்கி வெம்மை மறவாமை வேண்டுமென்று கூறுதல்.

கண்மறந் தாலு மிமைமறந் தாலுங் கனிமயில்கார்
விண்மறந் தாலும் வெயின்மறந் தாலும் விரைமலர்வாய்
பண்மறந் தாலும் பகர்ஷண் முகத் தாசன் பதியினுயிர்
மண்மறந் தாலு மறவா துறவெம்மை வாழ்த்துதுமே. (158)

கிழவோன் றஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தல்.

(இ-ள்.) இவ்வாறு கூறக்கேட்ட தலைவன் வேறோர் பற்றுக் கோடு பெறாது நெஞ்சுடன் கூறுதல்.

ஆங்கனை யும்புனங் காக்குறி யாதி யனைத்துமன்னி
போந்தனை யார்நெறி யின்றகன் றும்பின் னிரும்புவிக்கோர்
வேந்தனை யான்விறல் ஷண்முகத் தாசன் வியன்சிலம்பிற்
போந்தனை யன்மன மேயினி யென்பிவண் போதுவையே. (159)

இவற்றுள் - கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கலும் பாங்கி புலம்பலுந் தலைவனிடத் தலைவி வருந்தலு முன்னிலைப் புறமொழி மொழிதலுந் தலைவி பாங்கியொடு பகர்தலும் நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கலுங் கிழவோன் றஞ்சம்பெறாது நெஞ்சொடு கிளத்தலுமாகிய வேழு மிரங்கற்கும், தலைவியைப் பாங்கி கழறலும் பாங்கி யச்சுறுத்தலும் பாங்கி தலைவிக் கவன்வரல் சாற்றலுமாகிய மூன்றும் வன்புறைக்கும், பாங்கி இறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தலு முன்னிலைப் புறமொழி மொழிந் தறிவுறுத்தலு முன்னின்றுணர்த்தலு மோம்படை சாற்றலுமாகிய நான்கு மிற்செறிப்புணர்த்தற்கு முரியன. முன்னைய வேழில் நெஞ்சொடு கிளத்தலொழிந்த வாறும்வரைதல் வேட்கைக்கும், பின்னைய நான்கும் வரைவு கடாதற்கு முரியன.

ஒருசார் பகற்குறி-முற்றிற்று.

---

## பகற்குறியிடையீடு.

அஃதாவது:—பகற்குறிக்கண்வந்த தலைமகன் குறிக்கட் செல்லாது இடையீடு பட்டுப்போதல். இடையீடு-தடை; அது-விலக்கல் சேறல் கலக்கமென மூவகைப்படும்; அவை வருமாறு:—

இறைவனைப் பாங்கி தறிவால் விலக்கல்.

(இ-ள்.) இனி அடிக்கடி தாய்வருவள். சிலர்தாற் பழியுண்டா மென்று தலைவனைப் பகற்குறியிடத்து வாரேலென்று பாங்கி கூறுதல்.

அன்போ டருள்குணத் தான்வாணன் றஞ்சைத் தாரி னருஞ்சிலம்பின்
முன்போ லடுத்தடுத் தண்ணலெம் மெல்லென்ற மொய்புனத்தி
னென்போர் மறவ ரினியிருந் தாரின்று நோக்கினைப்பாற்
பொன்போ லொளிருட னன்னையுந் தாய்வந்து போகுவளே. (160)

இறைவியைப் பாங்கி தறிவால் விலக்கல்.

(இ-ள்.) பாங்கி தலைவியை நோக்கி புனத்துடைய தனபாரங் களிளமுகை யையுற்றுத் தாய் பார்த்துக் கவல்கின்றனள். இனியிப்புனத்தில் வரலொழிவாயென்று கூறுதல்.

இப்பார்க் கனிக்குமெய் வாணன்றஞ் சைத்தா ரிருஞ்சிலம்பிற்
பரப்பார் மதர்விழிப் பாவையா ளையுன் றனபாரமுலை
சுரப்பார் பொலிவுமெய்த் தோற்றமு மாற்றமுந் தோற்றுவித்தன்
கரப்பார் மனங்களன் றேயினி யின்றினிக் காவகமே. (161)

இறைமக ளாடிட நோக்கி யழுங்கல்.

(இ-ள்.) தலைவி தான் விளையாடிய விடங்களைவிட்டுப் பிரிதற் கஞ்சி வருந்தல்.

ஆடித் திரிந்த சுனையும் பொழிலு மருந்தடமுந்
தேடிக் குழகுரக் கென்றெரிக் கெல்லையென் செப்புமுள்ள
நாடித் தருந்திரு மால்வணங் குந்தஞ்சைத் தாரி னெறிவெற்பிற்
கூடிப் பிரியவர்க் கில்லையெங் காதலெய்ய் கோணிலையே. (162)

பாங்கி யாடிடம் விடுத்துக்கொண் டகறல்.

(இ-ள்.) தலைவியைப் பாங்கி விளையாடிடத்தைவிட்டுத் தம் மூர்க்குக் கொண்டுபோதல்.

கார்கண் டுவக்கு மயில்காள் கிளிகாள் கனைகமணிப்
போர்கண் டுவந்தபு மான்வணங் குந்தாசின் புனிதவெற்பி
னேர்கண்டு நம்பிரி வெண்ணரியுண் மாழ்கு மிறைவர்க்கெங்கண்
ணீர்கண்டு மேவ விகழ்த்துவி ரோவிந்த நீணெறியே. (163)

இதுவரையும் எழுநாள் நிகழ்ச்சி யென்க.

பின்னுநெடுந்தகை குறிவயி னீடுசென்றிரங்கல்.

(இ-ள்.) எட்டாநாள் தலைவன் குறியிடமாகிய மாதவிப்பந்தரிடத்து வந்து காலநீட்டித்துத் தலைவியை நினைத்து வருந்துதல்.

கூடுஞ் சகம்பிரிந் தாற்றெரி வாமெனக் கூர்ந்தெவரும்
பாடு மொழிபயிற் றோமறந் தோவிந்தப் பாரிடங்கொண்

டாடும் புகழ்ப்பெரு மான்ஷம்சுத் தாசி னருட்கிரிவா
யோடுங் கலேபிணங் காணவ னோடி யொளித்ததுவே. (164)

தலைவியை வறுங்களநாடி மறுகல்.

(இ-ள்.) தலைவியில்லாத தினைப்புனத்தை நோக்கித் தலைவன் வருந்துதல்.

வெல்லு மதமலை வெள்ஷம்சுத் தாசின் வியன்வரைவாய்க்
கல்லுங் கரைந்தநங் கண்ணீர் சொரிந்து கசிந்துருகி
யல்லும் பகலு மழிவேற் கெனையென் னணிபிணங்காள்
செல்லும் பொழுதுந் தெரிவினை யோவந்தத் தேமொழியே. ()

குறுநீடோடி யாழ நோக்கி மதியயங்கல்.

(இ-ள்.) தலைவியை யூர்தேடிச் செல்வோமானால் அறிந்தில மென்று தலைவன் மதிகலங்கிக் கூறுதல்.

காடரி தாலவ ளூரும் பெரும்முனை ணன்றுநெறி
நேடரி தாலென்றுஞ் செல்லரி தாலயண் சேர்மறவர்
பாடரி தாலருண் மால்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்க்
கூடரி தாலென்செய் வேன்மன மேகிலே கொள்ளுதற்கே. (166)

இவற்றுள் - இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலு மிறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கலுமாகிய விரண்டும் விலக்கற்கும், குறிடம் விடுத்துக்கொண் டேகறலொன்றுஞ் சேறற்கும், இறைமகளாடிட நோக்கி யழுங்கல் முதலிய நான்கும் கலக்கத்திற்குமுரியன.

பகற்குறி யிடையீடு-முற்றிற்று.

---

## இரவுக்குறி.

அஃதாவது:—தலைவன் தலைவியை யிரவுக்குறியிற் கூடுதல்; அது-வேண்டல் மறுத்தல் உடன்படல் கூட்டல் கூடல் பாராட்டல் பாங்கிற் கூட்டல் உயங்கல் நீங்கல் ஆகிய ஒன்பது வகைப்படும்; அவை வருமாறு:—

இறையோ னிருட்குறி வேண்டல்.

(இ-ள்.) தலைவன் இருட்குறியைவிரும்பிப்பாங்கியுடன்கூறுதல்.

தருந்தா மரைக்கரத் தான்ஷம்சுத் தாசின் றமிழ்ச்சிலம்பி
லிருந்தாரை மேக மொழுக்கது வானி லிரவியுமத்
திருந்தார் கலியகஞ் சேர்ந்தனன் கங்குலுஞ் சேர்ந்ததுங்கள்
விருந்தாக வந்தனன் மெல்லிசல் லீரிந்த வேளையிலே. (167)

பாங்கி நெறியின தருமை கூறல்.

(இ-ள்.) அதுகேட்ட தோழி தலைவன் வரும் வழியில் சிங்கமுதலிய மிருகங்கள் சஞ்சரித்தலால் அவ்வழி வரலரிதென்று கூறுதல்.

கொல்லும் புலியுங் கொலைவரி வேங்கையுங் கூர்ந்தெழுந்து
செல்லும் பெருவனத் தோர்தனி யாய்க்கன்றுஞ் செவ்விபெற்போர்
வெல்லும் பரிமத வேள்ஷம்சந் தாசின் வியன்கிரிக்குள்
வல்லும் பொருதனத் தீர்வரு வார்க்கென் வருந்துவதே (173)

நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல்.

(இ-ள்.) இவ்வாறு கூறக்கேட்ட தலைவி யிசையாது தன்னெஞ்சுடன் சொல்லுதல்.

இருளும் புயலு மிபமு மரியு மெதிர்த்தும்பில்
வெருளுந் திருநெறிக் கானடைந் தெம்மிறை மேவருமோ
அருளும் பொருளுமுள் ளோன்ஷம்சந் தாசி னருங்கிரிவாய்
மருளும் படிமன மேவலித் தாலொரு வன்கணனோ. (174)

நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல்.

(இ-ள்.) நெஞ்சொடு கூறிய தலைவி தோழியோ டுடன்பட்டுக் கூறுதல்.

உடலோ டுயிர்பொரு ளெல்லா மவரென் றுணர்ந்தவென்பாற்
கடலோ டொருவாக் கருங்கண்க ளுளார் கனிந்தெழிற்றெவ்
வடலோ டமராப் போன்ஷம்சந் தாசி னருட்கிரிவாய்
மடலோ டொளிரு மலர்முகத் தீரென் வருந்துவதே. (175)

நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குணர்த்தல்.

(இ-ள்.) தலைவி யுடன்பட்டமையைத் தலைவனுக்குத் தோழி கூறுதல்.

போற்றியுந் தாழ்ந்தும் புகழ்ந்தும் பலபல புத்துரைகள்
சாற்றியு மன்னவ ளெஞ்சங் கனியத் தரணிமுற்றுந்
தேற்றிய வெண்புகழ்ச் சேய்ஷம்சந் தாசின் செழுஞ்சிலம்பிற்
றேற்றிய வாறா சேவென்னென் கோவுளந் தேர்ந்துனக்கே. (176)

குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல்.

(இ-ள்.) பாங்கி தலைவனைக் குறியிடத்து நிறுத்தித் தாயினது நித்திரையை யறிதல்.

மணந்தந்த சந்தனம் புன்னைய சோகமன் மாதவிவங்
கணந்தந்த மல்லிகை முல்லையெ லாமொரு கைக்கனிதற்
றணந்தந்த மெய்ச்சில வேள்ஷம்சந் தாசி னிருந்தடத்தம்
பணந்தந்த வல்குலம் பாவாய் நிரையறப் பாய்கின்றதே. (177)

இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தல்.

(இ-ள்.) தலைவிக்குத் தோழி தலைவன் குறியிடத்து வருதலை யறிவித்தல்.

டேர்கண்ட மென்முலை யல்குற் றடங்கொளு மென்னையின்றக்
கேர்கண்ட போதந்த நாகங்க ளென்செயு நேரிழையே. (183)

புணர்தல்.

(இ-ள்.) வெளி.

எடுக்க வெடுக்கக் குறையா வமுத மிருகலங்கொண்
டடுக்கப் படைத்தது வோவின்ன றுயுன்ற னாகமென்றன்
கொடுக்கப் பிறந்தபு மான்ஷம்சுத் தாசின் கொழுங்கிரிவாய்
மடுக்க மடுக்கவுண் மாறார் சுகந்தந்து வாழ்வித்ததே. (184)

புகழ்தல்.

(இ-ள்.) வெளி.

எமையா தரிக்குமிக் கோன்ஷம்சுத் தாசி னிருஞ்சிலம்புஞ்
சமையாத பொம்மற் றருதனத் திருந்தஞ் சாயலெல்லா
மிமையாது நோக்கி யிகழிலை யின்றி யிருப்புமிங்ங
னமையாது விண்போர் தலைந்தனர் காணவ் வரம்பையரே. (185)

இறைமக னிறைவனைக் குறியால் விலக்கல்.

(இ-ள்.) யானையைச் சிங்கமோது மிராக்காலத்திலே வரிற் றன்பயமுண்டாமென்று பயந்து தலைவி தலைவன்வருதலை விலக்கல்.

ஒருகைக் களிறு மராவு மரியு முழுத்தெழுந்து
பொருகைக் குரியனிப் பொங்கிருட் சாரலிற் போர்த்தெவர்க்குத்
தருகைக் குயர்ந்தக் கோன்ஷம்சுத் தாசின் றமிழ்ச்சிலம்பில்
வருகைக் கெளிதல வந்தால் வருந்துவர் மன்னவனே. (186)

இறைவியை யில்வயின் விடுத்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை வீட்டி னிடத்துச் செல்லென விடுத்தல்.

கோணாது காக்குநற் கோன்ஷம்சுத் தாசின் கொழுங்கிரிவாய்ப்
பூணாது நூபுரச் சிற்றொலி வாணகைப் போதனைத்தும்
பேணாது செஞ்சிலம் பேற்றா தடியிணைப் பெற்றவன்னை
காணாது போர்தருன் கன்னிகல் லாயுன் கடிமனைக்கே. (187)

இறைவியை யெய்திப் பாங்கி கையுறை காட்டல்.

(இ-ள்.) குறியிடத்து நீங்கிய பாங்கி தலைவியை யடைந்து கையுறை காட்டுதல்.

தண்ணார் நறவத் தளவமெல் லாமுன் றனிநகைகண்
டண்ணார் துடைந்து மலர்வாய் விடுத்த னுதினமு
மண்ணார் பெரும்புய மால்ஷம்சுத் தாசின் மலயவெற்பி
லெண்ணா தெடுத்தவர் நேரணிவாயென்ற னேரிழையே. (188)

ஞந்கொண்டேகல்.

(இ-ள்.) தலைவியைப் பாங்கி வீட்டிற்குக் கூட்டிக் கொண்டு செல்லுதல்.

ஒல்காப் புகழ்ப்பெரு மான்ஷம்சத் தாசி னுயர்சிலம்பிற்
பல்கா ரமுதனை யாப்புயி லித்தனை பார்க்கினாமை
யில்கா ரணமினிக் தென்னினை யாள்சரி யின்றினி
செல்கா லெனகட வாவடை வாமத் திருமனைக்கே. (189)

பிற்சென் றிறைவனை வரவு விலக்கல்.

(இ-ள்.) தோழி தலைவியை மனையிற் சேர்த்த பின்பு தலைவன் பாற்சென்று இவ்விருளில் நீ வாரதே யென்று விலக்கிக் கூறுதல்.

கன்மேற் பொருபுயத் தோன்ஷம்சத் தாசின் கனகதடத்
தின்மேற் பொருமுலைக் கின்பவன் பாயில் விரவிலொருத்
தன்மேற் பொருபுலி வாழ்சிறு சாரலிற் சாரலினி
யென்மேற் பொருபழி யின்றவந் தாற்பழி யென்றைக்குமே. ()

பெருமகன் மயங்கல்.

(இ-ள்.) பாங்கி யிவ்வாறு இரவுக்குறி விலக்கிய சொற்கேட்டு தலைவன் மனங் கலங்கிக் கூறுதல்.

செல்லே பொறுக்கும் வரலே விரும்புஞ் செகதலமக்
கலலே மறக்கொரு கட்டுரை தாங்கியிக் காளிலத்தோர்
குலவே ளெனவரு கோன்ஷம்சத் தாசின் கொழுங்கிரிவா
ழிலவே கிசர்த்தாய் மடந்தை யிதுசொல் லியல்புனக்கே. (191)

தோழி தலைமக வேயர் கினைந்து விடுதல்.

(இ-ள்.) பாங்கி தலைவனுக்குத் தலைவிக்கு நேருந் துயரைக் கூறி நீ யவர்போய்ச் சேர்த்த செய்தி யா மறியும்படி அடையாளங் காட்டென்று கூறி விடுத்தல்.

வெறியார் மலர்த்தொடை வேன்ஷம்சத் தாசின் வியன்கிரிவாய்ப்
பொறியா ரவப் பொருதம்பிரட் சாரலிற் போறுமுன்னூர்
நெறியா லலமரு சேரிமைக் கங்க ளிலக்கினுன்றன்
குறியா லுயிரளித் தாருதி போதியென் சொற்றவனே. (192)

நீருகட் புணர்ந்தவன் சேறல்.

(இ-ள்.) தலைவியைக் கலந்த தலைவன் றன்னூர்க்குப் போதல்.

தொடிக்கடி செய்கரத் தோகை மருங்கெழிற் சூழ்தாசர்
முடிக்கடி நற்தபெம் மான்ஷம்சத் தாசின் முதிர்கிரிவா
படிக்கடி நோக்கும் நலமகு மின்னினல் லாய்த்துநெறி
கொடிக்கடி மாற்றி யடைகுவ லென்பதி தன்னிடையே (193)

இவற்றுள்-இறையோ னிருட்குறி வேண்டலும் நெறியினதெளிமை கூறலும் தலைமகனவனாட்டணியியல்வினாதலும் பாங்கி இறைவிக்கு இறையோன் குறையறிவுறுத்தலுமாகிய நான்கும் வேண்டற்கும், பாங்கி நெறியினதருமைகூறலும் இறைமகள் இறைவனைக்குறி வரல் விலக்கலும் பாங்கி இறைவனை வரவு விலக்கலுமாகிய மூன்றும் மறுத்தற்கும், பாங்கி யவனாட் டணியியல் வினாதலும் அவற்குத் தன்னாட் டணியியல் பாங்கி சாற்றலும் நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தலுமாகிய மூன்றும் உடன்படற்கும், தலைமகள் நேர்ந்தமை பாங்கி தலைவற்குணர்த்தலும் குறியிடை நிறீஇத்தாய் துயிலறிதலும் இறைவிக்கு இறைவன் வரவறிவுறுத்தலும் அவட்கொண்டு சேறலுமாகிய நான்குங் கூட்டற்கும், தலைமகன் தலைமகளை யெதிர்ப்படுதலும் தேற்றலும் புணர்தலுமாகிய மூன்றும் கூடற்கும், தலைமகன் புகழ்தலும் கையுறைகாட்டலுமாகிய இரண்டும்பாராட்டற்கும், தலைமகன் தலைவியை யில்லயின் விடுத்தலும் பாங்கி தலைமகளை இற்கொண்டேகலுமாகிய இரண்டும்பாங்கிற்கூட்டற்கும், நேரிறைவி நெஞ்சொடு கிளத்தலும் தலைமகன் ஆற்றினதருமை நினைத்திரங்கலும் பெருமகன் மயங்கலும் தோழி தலைமகன் துயர் கிளந்துவிடுதலுமாகிய நான்கும் முயங்கற்கும், பாங்கி குறியுய்த்தகறலும் இருமகட் புணர்த்தவன் சேறலுமாகிய இரண்டும் நீக்கற்குமுரியன. முயங்கல்-வருந்துதல்.

இதுவரையும் எட்டாநாள் நிகழ்ச்சி.

இரவுக்குறி-முற்றிற்று.

---

## இரவுக்குறி யிடையீடு.

அஃதாவது-இரவுக்குறிக்கண்வந்த தலைமகன் அல்ல குறிப் படுதலால், இடையீடுபட்டுப்போதல்; அஃது - அல்லகுறியெனவும் வருந்தொழிற் கருமையெனவு மிரண்டுவகைப்படும்; அவை வருமாறு. இடையீடுபடுதல் - குறி தவறுதல்.

இறைவிக் கிகுளை யிறைவர வுணர்த்தல்.

(இ-ள்.) மறுநாளிரவில் தலைவன் வருதலைத் தலைவிக்குப் பாங்கி கூறுதல்.

பொன்னுக மேனிப் புணர்முலை யாயென்கொல் பூவரசர்
மன்னுக வந்தவெம் மான்ஷம்சுத் தாசின் மருவலர்போற்
புன்னுக சேக்கைப் புறம்விடுத் திவ்விருட் போதிலன்னார்
தன்னுகஞ் சோரச் சலியா தெழுந்து நழுவின்றதே. (194)

தான்குறி மருண்டமை தலைவி யவட் குணர்த்தல்.

(இ-ள்.) தலைவி தான் அல்லகுறிப்பட்டுத் தலைவனைக் காணாமையால் மீண்டு விடியற்காலத்து வந்து பாங்கியுடன் கூறுதல். அல்லகுறியிடம் - குறிதவறிய விடம்.

தேறுத் தெளிவினென் செல்வர்வர் தேருர் திருவருளைக்
கூறு யருளுர வோன்ஷம்சுத் தாசீ னொளிர்வரையி
னீறுக் கரித்தெனை நித்தலுங் காய்ந்தவிர் நீண்மதிக்கு
மாறுக் களங்க மளிந்து மதியிலை மாதரசே. (210)

கூகை குழறுதல்.

(இ-ள்.) கூகை குழறக் கேட்ட தலைவி யஞ்சிக் கூறல்.

வஞ்சின மோபகை யோமுனி வோவரு மங்குலிற்குன்
மஞ்சின மோங்குகைம் மால்ஷம்சுத் தாசீன் வளநகர்வாய்த்
துஞ்சின தோர்ந்துமென் றோகைவெங் கூகை தொடர்ந்தரா
ரஞ்சின ராக வரற்றியென் னாவி யழிக்கின்றதே. (211)

கோழி குரற் காட்டுதல்.

(இ-ள்.) இருவர்க்கு மிடையூறாய்க் கோழி கூவுதல்.

ஆவற் கருமருந் தன்னநம் மன்ப ரளித்தகல
மாவற் புயப்பெரு மான்ஷம்சுத் தாசீன் மலையமனாய்
மேவற் கடையெழு யாமத்தி னஞ்சிறை விட்டடித்துச்
சேவற் குரற்செயச் செய்ததென் னோமுனர் தீவினையே. (212)

இவ்வேழும் இரவுக்குறி யிடையீட்டில் வருந்தொழிற் கருமை யின் விரி; இவ்வேழில் ஒவ்வொன்றுக்கும் நந்நான்கு நாழிகையாகக் கொள்க.

இரவுக்குறியிடையீடு-முற்றிற்று.

---

## வரைதல் வேட்கை.

அஃதாவது - இடையீடுபட்டதனாற் பதினோராநாள் தலைவி மணஞ் செய்தலை விரும்பல்; அஃது - அச்சம் உவர்த்தல் ஆற்றாமை யென மூன்றுவகைப்படும்; அவை வருமாறு:—

தலைமகளைப் பாங்கி பருவரல் வினவல்.

(இ-ள்.) தலைவி துன்பமுற் றிருத்தலைத் தோழி கேட்டல்.

வாடா மலர்முகம் வாடினை மைக்கண் வடித்தனைபொன்
தோடா ரலரெதுஞ் சூடிலை யாயன்னை சொற்றதுண்டோ
கோடாத கோன்மையங் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்பி
னோடாத மானனை யாயுரை யாயென்கொ லுற்றதுவே. (213)

அருமறை செவிலி யறிந்தமை கூறல்.

(இ-ள்.) தலைவி யரிய களவொழுக்கத்தைச் செவிலித்தா யறிந் தமை பாங்கிக்குக் கூறுதல்.

தண்டா வளத்தன தோன்ஷம்சுத் தாசின் றடத்தணங்கே
யொண்டா ரகைமதி போலுநம் மன்னே யுடற்பசப்பும்
வண்டார் புனேகுழற் சோர்வுங்கட் சேப்பு மயக்குமெதிர்
கண்டா ளயர்த்தறிக் தாலொடுத் தாளிரு கட்கணேயே. (214)

தலைமகன் வருந்தோழிற் கருமை சாற்றல்.

(இ-ள்.) தலைவி தலைவன் வருதற்கருமை பாங்கிக்குக் கூறல்.

தாயோ துயில்கிலள் ஞாளியு மூரன்ன சாற்றுபறை
வாயோ வடைக்கில கூகையுங் கோழியு மானுமதித்
தீயோ சுடுமிவை யெல்லாந் தொலைத்தன்பர் சேர்வதெவ்வா
றுயோ வெனுங்குணத் தான்ஷம்சுத் தாசி னருட்கிரிக்கே. (215)

தலைமகனூருக்குச் செலவோருப்படல்.

(இ-ள்.) தலைவ னிருப்பிடத்துக்குப்போதற்குத் தலைவி துணிந்து பாங்கிக்குக் கூறுதல்.

கூரா ரயில்விழிக் கோமள மேநந்தங் கொற்றவரூர்
சேரா யடைந்தவர் நேர்மையெ லாங்கண்டு நீக்கமுறின்
றேரார் குலவரிச் செய்ஷம்சுத் தாசின் செழுஞ்சிலம்பி
லோரா துடல்பொரு ளாவியெ லாமவர்க் கொப்பிப்பமே (216)

பாங்கி யிறைவனைப் பழித்துரைத்தல்.

(இ-ள்.) தோழி தலைவனை நிந்தித்துக் கூறுதல்.

மறங்கா லயில்விழி மங்கைநல் லாயவர் வார்த்தையன்பிற்
புறங்கா தலுமுள தன்றகன் றூரவண் போந்துமென்றே
வறங்கா தலித்தபு மான்ஷம்சுத் தாசி னருஞ்சிலம்பி
லிறங்காத் துறையி லிறங்கிய தானமக் கிவ்வினையே. (217)

இறைவி யிறையோன்றன்னே நேர்ந்தியற்பட மொழிதல்.

(இ-ள்.) பாங்கி தலைவனியலைப் பழித்தது பொருளாய்த் தலைவி தலைவனோ டென்பட்டவளா யவனியலைக்கூறுதல்.

அல்லும் பகலு மடுத்தடுத் தாகு மனைமிலனுர்
புல்லுஞ் சுகமும் புறத்துள தாலெனிற் போற்றலர்போர்
வெல்லும் பெருந்திறல் வேள்ஷம்சுத் தாசின் வியன்சிலம்பிற்
சொல்லுங் குறையெவை யோவன்பர் பாலினித் தோகையரே. ()

இதுவரையும் பதினொராரான் நிகழ்ச்சி.

கனவு நலி புரைத்தல்.

(இ-ள்.) தலைவன் கனவிற் கூடினனாக, விழித்தபின்பு பொய்யாயப்போன துன்பத்தைப் பன்னிரண்டாரான் தலைவி பாங்கியினிடத்திற் கூறுதல்.

கூரா தொருதுயில் கொள்ளவு மன்பர் குறுகியென்னை
வாராய் முலைதிற வாய்மொழி யாய்கலை வாயமுதர்
தாரா யெனுமுனல் லோன்ஷம்சுத் தாசின் றமிழ்ச்சிலம்பிற்
காரார் குழலனங் கேவிழித் தேனவர்க் காண்கிலனே. (219)

கவினழி புரைத்தல்.

(இ-ள்.)* விரகத்தாற் றலைவிதன் னலனழிந்ததைப் பாங்கியுடன் கூறுதல்.

காட்டுக் கெறித்தகி லாவென வென்னிரு கைக்கயச்செங்
கோட்டுத் தனகல மன்பர்கைப் பேழையிற் கூடலின்றிப்
பாட்டுக் கினியபெம் மான்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்ச்
சோட்டுக் கருங்கொடி சூழ்நுத லாய்கிதஞ் சோர்கின்றதே. (220)

தன்றுயர் தலைவற் குணர்த்தல் வேண்டல்.

(இ-ள்.) தலைவி தன் றுன்பத்தைத் தலைவனுக்கு அறிவிக்கவேண்டுமென்று பாங்கியுடன் கூறுதல்.

பிடியோ டனநடைப் பெண்ணனங் கேமயல் பெற்றதல்லா
லடியோ டவரை யடைந்தன மன்பர்க் கரசர்மணி
முடியோ டிறைஞ்சிசை வேள்ஷம்சுத் தாசின் முதிர்கிரிவாய்த்
தொடியோ டறுவை தொலைந்தன வென்னமுன் சொல்லுதற்கே.()

துன்புறற் பாங்கி சொல்லெனச் சொல்லல்.

(இ-ள்.) யான் துயரடைதலைத் தலைவற்கு நீ சென்று சொல்லென்று தலைவி கூறியதற்குத் தலைவியை நோக்கிப் பாங்கிகூறுதல்.

பிணைதந்த வன்பிரு பேர்க்கிடை மற்றையர் பேசலென்றோ
கணைதந்த வேல்விழிக் கன்னிகல் லாய்புலிக் காவலர்கட்
கணைதந்த செம்பதத் தான்ஷம்சுத் தாசி னருங்கிரிமே
லிணைதந்த கின்மய னீயே சொலச்சுக மெய்துறுமே. (222)

அலர் பார்த்துற்ற வச்சக்கிளவி.

(இ-ள்.) ஊரி லுள்ளார் சொல்லும் பழிச்சொல்லைக் கருதி அதனு லுற்ற பயத்தாற் றலைவி கூறுஞ்சொல்.

மலர்க்குன் றொளிரு மதிமுகத் திலைம் மலர்க்கணையில்
வலர்க்குன் றுடைந்து மறுகேன் மறுகன் மண்டலிகர்
பலர்க்குன் றுயர்ந்தபு மான்ஷம்சுத் தாசின் புவிவல்லி
பலர்க்குன் னலரா வளர்ந்த திந்த வரும்பதியே. (223)

ஆறு பார்த்துற்ற வச்சக்கிளவி.

(இ-ள்.) வழியைப்பார்த்து அதனாலடைந்த பயத்தாற் றலைவி பாங்கியை நோக்கிக் கூறுஞ்சொல். பார்த்தல்—கருதல்.

பேரா ரமுதப் பிழம்பே யெளியேன் பெறற்குறுமோ
காரார் கயந்துவைத் தன்பர்செந் நீர்படி கான்மலர்பூந்
தாரார் துணைப்புயத் தான்ஷம்சுத் தாசின் றடத்திலென்கண்
ணீராற் கழுவிலையம் பாலாற் றுடைக்குமந் நீர்மையின்றே. (224)

காம மிக்க கழிபடர் கிளவி.

(இ-ள்.) தலைவி ஆசைமிகுந்து சிறப்பச் சிந்தித்துச் சொல்லுஞ் சொல்; இக்கிளவிக்குக் கடல், கானல், விலங்கு, புள் முதலியவற்றை விளித்துத் தலைவி யிரங்கிக் கூறுதல் மரபு.

எறியு மலைகட லேசுற வேகுரு கேயினமுஞ்
செறியும் பெருந்தவத் தோன்ஷம்சுத் தாசின் செழுஞ்சிலம்பிற்
பறியுந் தொடியும் படருந் துணியும் பசப்புமையல்
வெறியுஞ் சிறையும் விளைவு முணர்ந்திலர் மெய்யன்பரே. (225)

தன்னுட் கையாறெய்திடு கிளவி.

(இ-ள்.) தலைவி தன்னிடத்துத் துன்பத்தைப் பிறிதொன்றன் மேலிட்டுச் சொல்லுதல்.

மஞ்சங் கடுத்தனை மையற் பெருத்தனை மாமுலையும்
விஞ்சப் பொலிந்தனை மெய்யும் வெளுத்தனை வேற்றரசர்
துஞ்சப் பொருபடை வேள்ஷம்சுத் தாசின் சுடர்க்கிரிகண்
டஞ்சும் பிறையே யகன்றதுண் டோநிற்கு மன்பிலையே. (226)

நெறி விலக்குவித்தல்.

(இ-ள்.) தலைவி தலைவன் வரும்வழியை விலக்கெனப் பாங்கியொடு கூறுதல்.

பேரா தரப்பெரு மான்ஷம்சுத் தாசின் பிறங்கலெனை
வேரா ரிளமுலை யேகுறள் பேயொ டிருசுடருந்
தேரா தயிர்க்குஞ் சிறுநெறிச் சாரற் செறியிருளில்
வாரா திருக்க வழுத்துதி யன்பர்க்கென் வந்தனமே. (227)

குறி விலக்குவித்தல்.

(இ-ள்.) தலைவி தலைவன்வரு மிரவுக்குறியை விலக்கெனப் பாங்கியொடு கூறுதல்.

செறிக்குங் கருங்குழ லாய்புனங் காவ னிகழ்ந்தினனொல்
லெறிக்கும் பகலவ னெய்வதல் லாலன்பர்க் கேதிலைத்
தறிக்குங் கடுத்தலை வேள்ஷம்சுத் தாசின் றடத்தகத்தற்
குறிக்குங் குறிக்குட் குறுகலென் றோதலர்க் கோதையின்னே. ()

வெறி விலக்குவித்தல்.

(இ-ள்.) தாய்தந்தையர் வெறியாடுதலை விலக்கும்படி பாங்கிக்குத் தலைவி கூறுதல். வெறியாடுதல் - ஆடறுத்துப் பலியிடுதல்.

சேய்கொண்ட பூம்பதத் தோன்ஷேம்சுந் தாசின் சிலம்பிலெம்மைப்
பேய்கொண்ட தென்ன வறிவழிக் தன்பருட் பெய்புமைய
னேய்கொண்ட தோர்கில ளாய்வெறி யாட னுடங்குமிடைத்
தாய்கொண்ட வாவணங் கேநவிர்ப் பர்ய்வருந் தண்புகழே. (329)

பிற விலக்குவித்தல்.

(இ-ள்.) தலைவி பிதர வரவைத் தலைவற்குச் சொல்லி அவர் வரவைவிலக்கெனப் பாங்கிக்குக் கூறுதல்.

சரச குணசுக மால்ஷேம்சுந் தாசின் றனிச்சிலம்பி
லரச மதகரி யட்டவர்க் கன்றி யணிமறுகின்
முரச மதிர்தொனி யார்மணத் தென்ன முடுகிமலர்ப்
பிரச நறுங்குழ லாய்விலக் காயவர்ப் பிற்படவே. (330)

குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்.

(இ-ள்.) நந்தலைவர் விட்ட பெரியோர் மணம்பேசிவர அவரை நம்மவ ரெதிர்கொண் டழைக்குமாறு செய்யெனத் தலைவி பாங்கி யொடு கூறுதல்.

வான்கொண்ட மெய்ப்புகழ் மால்ஷேம்சுந் தாசின் மலையவெற்பி
னூன்கொண்ட கற்பழி யாதன்னை யாதியர் நாடுமன்பர்
தான்கொண்ட மன்றலந் தூதெதிர் கொள்ளத் தழைத்தசுனைத்
தேன்கொண்ட காவியஞ் சேல்விழி யாய்சொல் செழுங்கிளைக்கே.

இவற்றுள் - அருமறை செவிவியறிந்தமை கூறலுந் தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றலும் அலர்பார்த்துற்ற அச்சக்கிளவியும் ஆறு பார்த்துற்ற அச்சக்கிளவியும் வெறி விலக்குவித்தலும் குறி விலக்குவித்தலும் வெறி விலக்குவித்தலும் பிற விலக்குவித்தலும் குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தலுமாகிய ஒன்பதும் அச்சத்திற்கும், தலைமகனூர்க்குச் செல வொருப்படுதலும் பாங்கியிறைவனைப் பழித்தலும் தலைவி யிறையோன்றன்னை நேர்ந்தியற்பட மொழிதலுமாகிய மூன்றும் உவர்த்தற்கும், பாங்கி பருவரல் வினவலும் கனவு நலிபுரைத்தலும் கவினழி புரைத்தலும் தன்றுயர் தலைவற்குணர்த்தல் வேண்டலும் துன்புறல் பாங்கி சொல்லெனச் சொல்லலும் காமமிக்க கழிபடர் கிளவியும் தன்னுட்கையா றெய்திடுகிளவியுமாகிய ஏழும் ஆற்றாமைக்கு முரியன. பருவரல் வினவிய பாங்கியென்பதற்குவினவலு மொரு துறையாக்கலாற் சூத்திரத்திற் கூறிய பதினெட்டிற்குமேற் பத்தொன்பதாயிற்று.

இதுவரையும் பன்னிரண்டாவன் கேழ்ச்சி.

வரைதல் வேட்கை-முற்றிற்று.

---

## வரைவு கடாதல்

அஃதாவது - பாங்கி தலைவனுடன் வரைவுகடாதல். வரைவு கடாதல் - மணம் வினவுதல்; அது - பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தலென நான்கு வகைப்படும்; அவை வருமாறு :—

வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

(இ-ள்.) முன் வரைதல் வேட்கையில் தலைவி அருமறை செவிலியறிந்தமை கூறியவதனைத் தோழி தன்னைச் செவிலி வினவியதாகவும் அதற்குத் தான் மறைத்துக் கூறியதாகவும் தலைவற்குக் கூறுதல்; இக்கிளவிமுதல், பின்வரும் கவிணழிபுரைத்த லீறாகக் கூறிய கிளவிகள் பலவற்றுள்ளும் குறிப்பினானும் வெளிப்படையானும் வரைவுகடாவிய வாறு கண்டுகொள்க.

கிளையோ டலகளிப் போன்ஷம்சுத் தாசின் கிளர்சிலம்ப
முளையோ டிகல்புயத் தன்னையு மென்னை முடுகியிவள்
வளையோ டறுவை வழங்கிய தேதென மங்குலெல்லாங்
களையோ டிசைவகை கற்றன ளென்னக் கரந்தனனே. (232)

அலரறிவுறுத்தல்.

(இ-ள்.) ஊரில் தலைவியைத் தூற்றும் அலர்விரிந்ததென்று தலைவனுக்குப் பாங்கி யறிவுறுத்தல். அலர் - பழிமொழி. அறிவுறுத்தல் - அறியும்படி கூறுதல்.

ஆர்வா யடைப்பினு மூர்வா யடைப்ப தரிதெனநன்
கோர்வா யிறைவா யுனதிரு கையல ருற்றவிந்தப்
பார்வா யலரெனப் பைங்கொடி சோரப் படர்ந்தமுடிச்
சார்வா யலர்ந்ததெம் மான்ஷம்சுத் தாசின் றடத்தகத்தே. (233)

தாயறிவுறுத்தல்.

(இ-ள்.) தலைவியின் களவைத் தாயறிந்தாளென்று தலைவனுக்குத் தோழி யறிவுறுத்தல்.

காமா கலஞ்சுடக் காய்த்தொளி மாழ்கிக் கரிந்தழலைக்
காமா வலிபசப் பாதிகண் டேங்கி யகிலமெல்லாந்
தாமா வருபெரு மான்ஷம்சுத் தாசின் றடஞ்சிலம்போ
யேமாக் தனையிவை யென்கொலென் றுளன்னை யென்னையுமே. ()

வெறியச்சுறுத்தல்.

(இ-ள்.) அன்னை வெறியாடுதல் செய்ய நினைந்தாளென்று தலைவனுக்குப் பயமுறுத்திப் பாங்கி கூறுதல்.

அடனுற்ற வுண்ணல்பி ரான்ஷம்சுத் தாசி னருஞ்சிலம்பின்
மிடனுற்ற வேலன்ப ரீயவி யாமயல் வெவ்வழன்மூண்

டெனுற்ற தோர்மலை ளாபுலி வாயயர்க் துன்னுடைந்து
கடனுற்ற கன்னியென் றுய்வெறி யாடற் கருதினளே. (235)

பிறர்வரை வுணர்த்தல்.

(இ-ள்.) பிறர் மணங்குறித்து வந்ததைத் தலைவற்குப் பாங்கி கூறுதல்.

சங்கைக் குரியபு மான்ஷம்சுத் தாசின் றடந்துறுவேற்
செங்கைக் கொளிரா சேமுகத் திங்களுஞ் சேல்விழியுங்
கொங்கைக் குடமுங் குறுநகை யுங்குழற் கொண்டலுங்கண்
டெங்கைக் குருகா தவரெவ ரேயில் விருநிலத்தே. (236)

வரைவேதிருணர்த்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவனை நோக்கி நீ மணங்குறித்துத் தூதனுப்பினுல் தலைவி சுற்றத்தா ரெதிர்கொண்டு வருவரெனக் கூறுதல்.

பொய்க்கலை யாப்பொரு ளோன்ஷம்சுத் தாசின் பொதியவெற்பின்
மெய்க்கலை கண்டவர் மேவினன் பாவவர் மேயவரு
கைக்கலை யாதெதிர் வாரெமர் வெண்ணெய் கரத்திருத்தி
செய்க்கலை வாரென நீயலை யேலல்லி னீள்குறியே. (237)

வரையுநாளுணர்த்தல்.

(இ-ள்.) தலைவனுக்குப் பாங்கி மணஞ்செய்புநாளை யறிவித்தல்.

மணியா ளின்கத்திரு மால்ஷம்சுத் தாசின் மலையவெற்பிற்
கணியா வருங் கலைமதி வட்டமுங் கண்டதன்றி
பணியா வருபெரு மாவலர் வாயமு தாயிழையை
யணியா மணம்பெறக் காலமு நேரமு நாளுமின்றே. (238)

அறிவறிவுறுத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைமக ளறிவைத் தலைவனுக் கறியக் கூறுதல்.

புனித ளுதனெம் மான்ஷம்சுத் தாசின் புனிதவெற்பி
லினக ளுமக ளென்னநன் னீதி நயங்தெவர்க்கும்
கோமக னின்பழி யன்னையி னென்னையுங் கொண்டொழித்துக்
காமக ளாயின ளன்பமற் றேது கழறுவதே. (239)

குறிபெயர்த்தீதேல்.

(இ-ள்.) பாங்கி யிக்குறி யியல்பல்ல, வேறோர் குறியிடை வருக வென்று தலைவனுக்குக் கூறுதல்.

மாணுப் பொலிபுய மாஷ்ஷம்சுத் தாசின் மணிவரைவாய்ப்
பேணுப் பெருந்தவத் தன்னனின் சார்வைப் பெரிதுமுன்னி
வீணுய்க் கலங்குமென் மெல்லிநல் லாளன்ன மேனி
காணக் குறிபெயர்த் தாகெ நீயுமுன் கன்னியுமே. (240)

தலைவ னீங்கல் வேண்டல்.

(இ-ள்.) தலைவன் பாங்கியை யுடன்படுத்தி நீங்கற்பொருட்டு வேண்டிக் கூறுதல்.

ஏகமென் றோரெம் மிருவோ ருயிர்க்கு மிசைந்தபெருஞ்
சோகமென் ளேனுமென் ளென்வரு வேனுடன் றன்னலர்தம்
மாகமென் பேய்க்களிப் போஷம்சுத் தாசி னருஞ்சிலம்பிற்
போகமென் றோளணங் கேவிடை வேண்டும் புகன்றருளே. (254)

தலைவனைப் பாங்கி விடுத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவனை யூர்க்குப் போய்வருகென விடுத்தல்.

வள்ளத் திருவாய் மலரமு தெம்மனை வாழினுமுன்
னுள்ளத் திருத்தி யுடன்வரல் வேண்டுமிங் கொன்னலர்தோள்
விள்ளத் துணித்தவெம் மான்ஷம்சுத் தாசின் வியன்சிலம்பி
லள்ளத் தகுமரு ளோயயர்ந் தாலுண் டரும்பழியே. (255)

பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தல்.

(இ-ள்.) தலைவிக்குப் பாங்கி தலைவன் பிரிவைச் சொல்லுதல்.

தன்னா ருயிரென்கை தந்தகன் றூர்சில சாதித்தற்கூர்
இன்னா ருயிரனை யார்தரி யாரெதிர் நேரலர்முன்
மன்னா யுயருமெம் மான்ஷம்சுத் தாசின் மலையவெற்பிற்
பொன்னா ரணியிழை யாய்புல ராபின்று போதுவரே (256)

தலைவி நெஞ்சொடு புலத்தல்.

(இ-ள்.) தலைவி மனத்தொடு வருந்திக் கூறுதல்.

மறவா வரமளித் தெற்பிரி யேனெனா மன்னரின்று
துறவா விருந்து துயரளித் தாரிது சூழ்நெஞ்சே
யறவாழி யண்ணல்பி ரான்ஷம்சுத் தாசி னருஞ்சிலம்பி
லிறவா திருப்பவர்க் குண்டல வோபல் லிடுக்கங்களே. (257)

சென்றேனீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி.

(இ-ள்.) தலைவன் மாலைக்காலம்வரையும் வாராமல் வரவு நீட்டித்தலாற் காமமிக அதனால் மிகுந்த நினைவொடு கூறுதல்.

எறியுந் திரைக்கட லேகுரு கேயெனை யேதணந்து
பறியுந் துணைவர் பயிலிட நோக்கிப் பாவிதுய
ரறியும் படியொரு காலறை வீரற மாயிரமாஞ்
செறியும் பெருந்தவச் சேய்ஷம்சுத் தாசின் செழுங்கிரிக்கே. (258)

தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல்.

(இ-ள்.) மேற்கூறியவாறு வருந்திய தலைவியைப் பாங்கி யவ் வருத்தத்தைத் தணியச்செய்தல்.

சேல்வைத்த வேல்விழி யாயொழ வாயினிச் செல்வருன்றன்
மேல்வைத்த நோக்கின் விரைந்துறு வாரவண் மேனியென்று
நூல்வைத்த நெஞ்சினன் மால்ஷம்சுத் தாசின் றவல்கிரிக்குட்
கால்வைத்த பான்முற்றுங் கண்வைத்து முத்திக் களிப்பதற்கே ()

இதுவரையும் பதினொருநாள் நிகழ்ச்சி.

தலைவன் வந்தமை பாங்கி யுணர்த்தல்.

(இ-ள்.) தலைவன் வந்தசெய்தி தலைவிக்குத் தோழிகூறுதல்.

சிந்தா குலமுந் தியக்கு மயக்குந் தெளியவிங்கே
வந்தார் தலைவர் மயங்கேன் மணமினி மாமலர்சூழ் [ய்ச்
கொந்தார் தொடைப்புயக் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவா
சந்தா ரணிமுலைத் தையனல் லாய்சுகஞ் சாருதற்கே. (260)

வந்தோன் றன்னொடு நொந்து வினாதல்.

(இ-ள்.) பாங்கி வந்த தலைவனொடு துன்பப்பட்டு வினவுதல்.

இறையள வன்ப நினைப்பிரிந் தாவி யிருந்தறியா
கறையள வாய்குழ லன்னுத லாளையோர் நாண்முழுதுஞ்
சிறையள வாக்கித் திகைப்பித்த தேதுயர் தோரசர்
திறையள வேற்குமெம் மான்ஷம்சுத் தாசின் செழுங்கிரிக்கே. ()

தலைவன் பாங்கியொடு நொந்து வினாதல்.

(இ-ள்.) எவ்வண்ணந் தலைவியை யாற்றியிருந்தாயென்று தலைவன் றோழியோடு வருந்திக் கேட்டல்.

பொல்லா மதன்கணைப் பூவலர் வாரி பொருமொலிவிண்
செல்லா வருமதித் தீசிறு காற்குயிற் செய்பதிர்ச்சி
யெல்லா மறிந்தெதிர்த் தோபொறுத் தோவிருந் தீருரையீர்
பல்லா யிரம்புக ழோன்ஷம்சுத் தாசின் பனிவரைக்கே. (262)

பாங்கி யாற்றுவித்திருந்த வருமை சாற்றல்.

(இ-ள்.) வெளி.

கின்வாய் மொழிமற வாதரு ளோய்மய னீள்கடலாழ்
பொன்வாய்த் துயரம் புரந்தன னொற்றமைப் போற்றலர்தம்
புன்வாய் கிழிக்குமெம் மான்ஷம்சுத் தாசின் பொதியமலை
தன்வா யடித்திரு கைகொந்த வாறது சாற்றுதற்கே. (263)

இவற்றால் - தன்பதிக்ககற்சி தலைவன் சாற்றலும் பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தலுமாகிய இரண்டுஞ் செலவறிவுறுத்தற்கும், தலைமகனைப் பாங்கி விலக்கலொன்றுஞ் செலவுடன்படாமைக்கும், நீங்கல் வேண்டலொன்றுஞ் செலவுடன்படுத்தற்கும், பாங்கி விடுத்தலொன்றுஞ் செலவுடன்படுதற்கும், தலைமகன் நெஞ்சொடு புலத்த

லும் காமமிக்க கழிபடர்கிளவியுமாகிய இரண்டுஞ் சென்றுழிக்கலங் கற்கும், தலைமகளை யாற்றுவித்தலும் தலைமகன் வருதலை தலைமகட் குணர்த்தலுமாகிய இரண்டுந் தேற்றி யாற்றுவித்தற்கும், பாங்கி வந்தோன் றன்னொடு நொந்துவினாதல் முதல்மூன்றும் வந்துழி நொந்துரைத்தற்கு முரியன.

ஒருவழித்தணத்த னமுற்றிற்று.

---

## வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல்.

அஃதாவது விவாகத்தை யிடையிலே நிச்சயித்து விவாகத்துக்கு வேண்டும் பொருள் நிமித்தமாகத் தலைவன் பிரிதல் ; அது - பிரிவறிவுறுத்தல் பிரிவுடன்படாமை பிரிவுடன்படுத்தல் பிரிவுடன்படுதல் பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை வருவழிக்கலங்கல் வந்துழி மகிழ்ச்சி யென வொன்பது வகைப்படும்; அவை வருமாறு:-

என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றல்.

(இ-ள்.) விவாகத்துக்காகப் பொருள் கொண்டுவருதற்குப் பிரியும் என்னுடைய பிரிவைத் தலைவிக்குச் சொல்லென்று தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

பொருளே யறஞ்சுகம் பூக்குந் தருவது போந்தடைந்து
தெருளே தரவிவண் சேருவ னென்னவெஞ் சேரலர்முன்
மருளே தரப்பொரு மால்ஷம்சுத் தாசின் மலையவெற்பி
னிருளே யெருள்குழ லாயிசை யாயந்த வேந்திழைக்கே. (264)

நின்பொருட்பிரிவுரை நீயவட் கென்றல்.

(இ-ள்.) வெளி.

பொன்னுசை தாங்கிப் புறஞ்செல நீசொலும் புத்துரைகொண்
டென்னுசை மங்கைக் கியம்பரி தாலுல கெண்டிசையுந்
தன்னுசைக் கோல்கொடுத் தோன்ஷம்சுத் தாசின் றடஞ்சிலம்ப
நின்னுசை நேர்வா யே புரையற னீள்குழற்கே. (265)

நீட்டே னென்றவ னீங்கல்.

(இ-ள்.) தலைவன் நீட்டித்திராது விரைந்து வருவேனென்று பாங்கியொடு கூறி நீங்குதல். நீட்டித்தல் - காலந்தாழ்த்தல்.

ஓங்குங் கொடுஞ்சுர முற்றணங் கேயுவப் போடிருகை
தாங்கும் பொருடாச் சார்தரு வேனல்லிற் றூழ்குழற்றூன்
வீங்கும் பெரும்புகழ் வேள்ஷம்சுத் தாசின் வியன்கிரிக்கு
ளோங்கும் படிதரி யேன்றரித் தாற்பழி யென்றனக்கே. (266)

இதுவரையும் பதினேழாகாள் மகிழ்ச்சி.

பாங்கி தலைவிக்கவன்செல வுணர்த்தல்.

(இ-ள்.) பொருள்வயிற் பிரியும் தலைவன் செல்லுதலைப் பாங்கி தலைவிக்குக் கூறுதல்.

